
ஜீவனும் அனுவும் உலகத்தின் விசித்திரமான உருவங்களை
அறிமுகப்படுத்துகிறார்கள்!


உலகத்திலேயே குட்டையானவர் ஹாலந்தைச் சார்ந்த பாலின் மஸ்டர்ஸ் என்ற பெண் மணி அவர் 19 வயதில் 23.2 அங்குலமே உயரமுள்ளவராய் இருந்தார்.


உலகத்திலேயே பருமனானவர் யு.எஸ்.ஏயைச் சேர்ந்த ராபர்ட் ஹ்யூக்ஸ் ஆவார். 11.14 பவுண்டு எடையுள்ள குழந்தையிலிருந்து 1,069 பவுண்டு எடையுள்ள பெரியவனாக வளர்ந்தார்.


உலகத்திலேயே உயரமானவர் யு.எஸ்.ஏயைச் சேர்ந்த ராபர்ட் வாட்லோ என்பவர். 20 வயதில் அவர் உயரம் 8 அடி 11.1 அங்குலம்.


மிக நீண்ட கழுத்துள்ளவர்: பர்மாவிலுள்ள படாங் என்ற மலை சாதியினரைச் சேர்ந்த ஒரு பெண்ணிற்கு 15 ¾ அங்குலம் நீண்ட கழுத்து உள்ளது. கழுத்தை நீண்டதாகச் செய்ய செம்புக் கம்பிகள் அவள் கழுத்தைச் சுற்றிப் பொருத்தப்பட்டுள்ளன.


மெக்ஸிகோவைச் சேர்ந்த லூஸியா ஸராடே என்ற பெண்தான் பதிவு செய்யப்பட்ட புள்ளிப்படி மிகவும் மெலிந்தவர். பிறந்தபோது 2.5 பவுண்டு எடையிருந்த அவர் 20 வது வயதில் 13 பவுண்டுகளே எடையுள்ளவராக இருந்தார்.


ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் ஒன்றுதான்
பத்திரமான நிச்சயமான வழி
உங்கள் எதிர்காலத்தைப் பாதுகாக்க.
அதைப்பற்றிக் கண்டுபிடியுங்கள்.


ஆயுள் இன்ஷ்யூரன்ஸ்
கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா
அடுத்தது. இரு சுட்டிகளும் உலகத்தில் மனிதத் தன்மை கொண்ட ஜந்துக்களை குசலம் விசாரிக்கிறார்கள்.
daCunha Lic-101-TM

**Results of Chandamama—Camlin Colouring Contest No. 16 (Tamil)** VISION 792 TAM

*1st Prize:* J. R. Srinivasan, Trichy-8. *2nd Prize:* N. Vanathi, Loweranicut Post. *3rd Prize* R. Venkata Ramesh, Coimbatore-30; *Consolation Prizes:* M. Suresh, Madras-14; P. Sompathkumar, Coimbatore. R. Akilambal, Erode 638 001; P. Geetha, Madras-34; R. M. Alayappan, Madras-600 078.



# அம்புலிமாமா

டிசம்பர் 1980



## பொருளடக்கம்






தனிப் பிரதி ரூ. 1-50.
வருட சந்தா ரூ. 18-00.

"மற்ற ரகங்களை
விட விலை குறைவு
நியூட்ரமுல்!"






Nutramul
The strengthening
all-family drink.

**கிட்டத்தட்ட
3 ரூபாய் குறைவு.**

மிகமிகக் குறைந்த விலையில்
சிகரமான தரம்: அமுல் தத்துவ
மாகிய இதற்குப் பளிச்சிடும்
உதாரணம்—நியூட்ரமுல்.

ஆகவே, நாளுக்கு நாள்
ஆயிரமாயிரம் பேர் நியூட்ரமுல்
பிரியர்களாக மாறிவருவதில்
அதிசயமென்ன

அமுல் படைப்பு

# நியூட்ரமுல்



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேட்டிவ் மில்க் மார்க்கெட்டிங்
ஃபெடரேஷன் லிமிடெட், ஆனந்த், குஜராத்.




daCunha-GCM-31-TM

டாக்டர்!
என் பொம்மைக் குழந்தைக்கு உடம்பு சரியில்லே.
கொஞ்சம் பாருங்கோ.

ஜுரமில்லே.
"வயிற்றிலேதான் ட்ரபிள்."
உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் கொடு.

டாக்டர்!
இந்த மழை காலத்திலே உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் கொடுக்கலாமா.

மழையோ, கோடையோ குளிரோ, எல்லாகாலத்திலும் குழந்தைகளின் பொது நலனுக்கு உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர்.






**100 ஆண்டுகளுக்கும் மேலாக தாய்க்குலம் நம்புவது**

# உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர்

CAS OPPL 3/80 TM



# அம்புலிமாமா


நிறுவனர்: 'சக்கரபாணி'

நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி


அனிச்சப் பூவை வாசனை பார்த்தால் வாடி விடும். அதைப் போல மகிழ்ச்சியுடன் பாராமல் இருப்பவன் வீட்டிற்குச் செல்லும் விருந்தாளியும் மனம் வாடி நிற்பார். இதனையே வள்ளுவர்.

**மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து.**
**நோக்கக் குழையும் விருந்து.**

எனக் கூறினார். எனவே வீட்டிற்கு வரும் விருந்தாளிகளை முகம் மலர்ந்து வரவேற்று உபசரிக்க வேண்டும். இக்கருத்தை ஏற்போமாக.

உருவத்திலும் பலத்திலும் ஓங்கி நிற்பவர்கள் துணிச்சலும் வீரமும் கொண்டவர்களிடம் அடங்கியே ஆகவேண்டும்.

**ப்ரமாணாததிகஸ்யாபி கண்டஸ்யாம மதச்யுதேஹ**
**வதம் மூர்த்நின்மாதத்தே கேசரி மத்ததந்திநஹ**

யானை உருவில் பெரிதாயும் பலம் மிக்கதாயும் இருந்தும் துணிச்சலும் வீரமும் உள்ள சிங்கம் அதன் மத்தகத்தைப் பிளந்து விடுகிறது. எனவே உருவைக் கண்டு பயப்பட வேண்டாம் என்பது இந்த சம்ஸ்கிருத சுலோகத்தின் கருத்து.


மதிமுகம்: 67 டிசம்பர் 1980 புன்னகை: 6

தனிப் பிரதி: ரூ. 1-50 வருட சந்தா: ரூ. 18-00










# கேள்வியும் பதிலும்

**எம். வி. மூர்த்தி, கம்மம் (ஆந்திரா).**

கேள்வி : ஒரு வாரத்தில் நாட்களை ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன் வியாழன், வெள்ளி, சனி, எனப் பெயரிட்டடர்களே. எப்படி வாரம் என்பது ஏற்பட்டது ?

பதில் : இந்த வாரம் ஏழு நாட்களைக் கொண்டதாக உலகெங்கிலும் உள்ளது. ஆனால் ஒவ்வொரு நாளும் தன் கலாசாரப் பண்பிற்கு ஏற்ப இதற்குக் காரணம் கூறுகிறது. நம் முன்னோர்கள் ஏழு என்ற எண்ணிக்கையைப் புனிதமாகக் கருதினர்கள் போலும். அதனுல் சப்தரிஷிகள், சப்தசாகரம், சப்தஸ்வரம், சப்த லோகங்கள், சப்தகன்னிகைகள் என்றெல்லாம் கூறியது போல சப்தகிரகங்கள் என ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன் (குரு) வெள்ளி (சுக்கிரன்) சனி ஆகிய பெயர்களை நாட்களுக்கும் சூட்டி விட்டார்கள் போலும். அப்போது இவை தனித் தனி கிரகங்களாகப் பாவிக்கப்பட்டன. இப்போதோ சூரியனைச் சுற்றும் கிரகங் களாகக் கருதுகிறோம். ஆனாலும் இந்தப் பெயர்கள் நாட்களுக்கு நிலைத்து விட்டன.

**ஸ்ரீநந்தா, பெங்களூர் (கர்நாடகம்)**

கேள்வி : விண்வெளிப் பாதை என்பது என்ன ?

பதில் : வானத்தில் நட்சத்திரங்களைக் கூட்டம் கூட்டமாகக் காண்கிறோம். நாம் சூரியகுடும்பப் பிரிவில் இருப்பதால் கோடிக் கணக்கான நட்சத்திரங்கள் நம்மை சுற்றி உள்ளன. இந்த நெருங்கிய நட்சத்திரங்களின் ஒளி வீசப் பாதை போல அமைவதால் இப்பாதை தெரிகிறது.

**எம். சுகுமார் ஜெயின், ஹிமோகா. (கர்நாடகம்).**

கேள்வி : சந்திரன் நமக்கு வட்டமாகக் தெரிகிறது. இது போல பூமியைச் சந்திரனிலிருந்து பார்த்தால் தெரியுமா ?

பதில் : தெரியும். சந்திரன் பக்கத்திலிருந்து பூமியின் புகைப்படம் எடுத்திருக் கிறார்கள். சந்திரனை விட பூமி மிகப் பெரிதாகையால் சந்திரனிலிருந்து பூமியைப் பார்த்தால் மிகப் பெரிய வட்டமாகத் தெரியும். நமக்கு அமாவாசையாகும் நாள் சந்திரனில் பௌர்ணமியாகும். அன்று சந்திரனில் பூமி முழுவட்டத்தோடு மிகப் பிரகாசமாய்த் தெரியும்.




மேகவர்ணனும் மற்ற காகங்களும் சேர்ந்து கத்தியது கேட்டு நீர்ப் பறவைகள் பயந்து கோட்டையை விட்டு வெளியேறி அகழிகளில் ஒளிந்து கொண்டன. சித்திரவர்ணனின் சேனாதிபதியான சேவல் ஹிரண்யகர்ப்பனையும் அவனது சேனாதிபதி சாரசனையும் துன்புறுத்தியது. அரசனிடம் ஹிரண்யகர்ப்பன் ''என் தலைவிதிப்படி நடக்கட்டும். நீ எப்படியாவது தப்பிப் போய் என் மகன் சூடாமணிக்கு ராஜ்யபட்டாபிஷேகம் செய்து விடு'' என்றது.

சாரசனோ ''என் உடலில் உயிர் உள்ளவரை உங்களை விட்டுப் பிரிய மாட்டேன்'' என்று கூறி சேவலின் முயற்சிகளை எல்லாம் முறியடித்தது. ஹிரண்யகர்ப்பனையும் அது பத்திரமான இடத்தில் கொண்டு போய்ச் சேர்த்தது. பின்னர் அது சேவலோடு சண்டையிட்டு அதனை கொன்றது.

ஆனால் மற்ற நிலப்பறவைகள் அதன் மீதும் கொக்கின் மீதும் விழுந்து இரண்டையும் கொன்று விட்டன. போரில் சித்திரவர்ணனுக்கே வெற்றி கிட்டியது.

அப்போது ஹிரண்யகர்ப்பன் தன் ஆட்களிடம் ''யார் நகர வீட்டுக் கூரைகளில் நெருப்பை மூட்டியது?'' என்று கேட்டது. மந்திரி சர்வக்ஞன் ''இந்த வேலையை அநேகமாக உங்கள் நண்பன் எனக் கூறிக் கொண்டு இங்கு வந்த மேகவர்ணனும் அவனது ஆட்களுமே செய்திருக்க வேண்டும்'' என்றது.

''எல்லாம் நம் போதாதகாலம்'' என்று ஹிரண்யகர்ப்பன் கூறவே

சர்வக்ஞனும் "ஏன் போதாத காலம் என்கிறீர்கள்? சரியான யோசனை கூறியும் அதனை ஏற்கா விட்டால் யாருமே கண்டிப்பாக இப்படித்தான் கஷ்டப்பட வேண்டி வரும்'' என்றது.

இதே சமயம் கர்ப்பூரத்வீபத்தைத் தோற்கடிக்க உதவிய மேகவர்ணனை அரசனுக்குவதாக சித்திரவர்ணன் கூறினான். ஆனால் அவனது மந்திரி தூரதர்சியோ "வேண்டாம். அவனைப் பொறுப்புள்ள பதவியில் அமர்த்தாமல் ஏதோ காசோ பணமோ பரிசாகக் கொடுத்து அனுப்பி விடுங்கள்'' என்றது.

சித்திரவர்ணனோ "மேகவர்ணன் அரசனாகி விட்டால் அவ்வப்போது எனக்கு அபூர்வ பொருள்களைக் காணிக்கையாகச் சமர்ப்பிப்பானே'' என்றது. தூரதர்சியோ "இப்படி ஆசைப்பட்டு மோசம் போகாதீர்கள்" என்று எச்சரித்தது.

சித்திரவர்ணனும் "அப்படியானால் இப்போது என்னை என்ன செய்யச் சொல்கிறீர்?'' என்று கேட்டது. தூரதர்சியும் "அந்த அன்ன மன்னனுடன் சமாதான உடன்படிக்கையில் கை எழுத்து இடுங்கள். பிறகு விந்தியமலைக்குத் திரும்புங்கள். தாமதித்தால் மழைகாலம் ஆரம்பமாகி விடும். அதற்குள் இன்னொரு போர் மூண்டு விடும். அதில் நமக்கே சேதம் ஏற்படும். இப்போதாவது கோட்டையை வென்றோம் என்ற புகழுடன் திரும்பலாம். அப்



போது அதுவும் முடியாது இருபக்கத்தவரும் சம பலம் உடையவர்களாகி விட்டால் இருவருக்குமே நஷ்டம்தான். எனவே இப்போது நம்மிடம் தோற்ற ஹிரண்யகர்ப்பனுடன் சமாதானம் செய்து கொண்டு நம் நாட்டிற்குத் திரும்புவதே நல்லது'' என்றது.

வெற்றிப் பெருமிதத்தில் இருந்த சித்திரவர்ணனுக்கு தூரதர்சியின் யோசனை முதலில் பிடிக்கவில்லை. இதற்குள் ஹிரண்யகர்ப்பனின் மந்திரி ஜம்புத்வீபத்திற்கு சாரசனின் மகனை அனுப்பினான். அவன் அங்கு செய்த சதிகளால் சிங்களத் தீவு ஜம்பூத்பத்தின் மீது படை எடுத்து வந்தது.

அப்போது தூரதர்சி தன் மன்னனிடம் மேகவர்ணனின் யோசனை என்ன என்று கேட்கச் சொல்லியது. மேகவர்ணனும் அன்ன மன்னனுடன் சமாதானம் செய்து கொள்ளச் சொன்னது. ஹிரண்ய கர்ப்பனையும் அவனது மந்திரியையும் பற்றி மேகவர்ணன் புகழ்ந்து ''இப்படிப்பட்டவர்களுடன் சமாதானமாகப் போவதே மேல்'' என்றது.

அப்போது சித்திரவர்ணன் ''எனக்கு அன்ன மன்னன் கப்பம் கட்டுவதானால் நான் அவனோடு சமாதானம் செய்து கொள்ளத் தயார்'' என்றது. ஆனால் இதே சமயம் ஜம்பூத்வீபத்திலிருந்து வந்த செய்திகள் அவனைக் கலக்கி



விட்டன. சிம்மள சேனுதிபதி யான நாரை ஜம்பூத்வீபத்தின் மீது திடீரெனப் படை எடுத்தே வந்து விட்டதாம்.

அப்போது சித்திரவர்ணன் ''அப்படியா? நான் இப்போதே விந்தியப்பகுதிக்குப் போய் படை எடுத்து வந்த நாரையை எதிர்த்தாக வேண்டும்'' என்றது.

அப்போது சர்வக்ஞன் ''அரசே. எதையும் யோசியாமல் அவசரப்பட்டு செய்து விடக் கூடாது. அப்படிச் செய்தால் ஆபத்தில் கொண்டு போய் விட்டுவிடும்'' என்றது.

சித்திரவர்ணனுக்கு அது உண்மைதான் எனக்தோன்றியது. உடனே சமாதானத்திற்கு ஏற்பாடு செய்யுமாறு கூறவே தூரதர்சி சமாதான தூதனுக ஹிரண்யகர்ப்பனிடம் சென்றது.

ஹிரணயகர்ப்பனும் சர்வக்ஞரிடம் ''இது ஏதாவது கபட நாடகமா? அல்லது உண்மையிலேயே இவர்கள் சமாதானத்தை நாடி வந்திருக்கிறுர்களா?'' என்று கேட்டது. சர்வக்ஞனும் ''இல்லே. முழுமனதுடன் செய்யப்படும் முயற்சிதான் இது'' என்றது.

தூரதர்சி சர்வக்ஞனிடம் "நாம் இரு அரசர்களிடையேயும் சமாதானம் நிலவச் செய்வோம். ஆயிரம் அசுவமேதயாகங்கள் செய்வதை விட உண்மையின் அடிப்படையில் நிறுவப்படும் சமாதானமே நிலேத்து நிற்கும்'' என்றது.

சர்வக்ஞன் மகிழ்ச்சியுடன் அதுவே சரி எனக் கூறி இருதரப்பினரிடையேயும் சமாதானம் நிலவ வழி செய்தான். அதன் பிறகு போர் மூளவில்லே. ஜம்பூத்வீபத்தில் சித்திரவர்ணனும் கர்ப்பூரத்வீபத்தில் ஹிரண்யகர்ப்பனும் சிங்களத்தில் மேகவர்ணனும் நன்கு ஆண்டு வந்தனர்.

(முடிவுற்றது)



போது அதுவும் முடியாது இருபக்கத்தவரும் சம பலம் உடையவர்களாகி விட்டால் இருவருக்குமே நஷ்டம்தான். எனவே இப்போது நம்மிடம் தோற்ற ஹிரண்யகர்ப்பனுடன் சமாதானம் செய்து கொண்டு நம் நாட்டிற்குத் திரும்புவதே நல்லது'' என்றது.

வெற்றிப் பெருமிதத்தில் இருந்த சித்திரவர்ணனுக்கு தூரதர்சியின் யோசனை முதலில் பிடிக்கவில்லை. இதற்குள் ஹிரண்யகர்ப்பனின் மந்திரி ஜம்புத்வீபத்திற்கு சாரசனின் மகனை அனுப்பினான். அவன் அங்கு செய்த சதிகளால் சிங்களத் தீவு ஜம்பூத்பத்தின் மீது படை எடுத்து வந்தது.

அப்போது தூரதர்சி தன் மன்னனிடம் மேகவர்ணனின் யோசனை என்ன என்று கேட்கச் சொல்லியது. மேகவர்ணனும் அன்ன மன்னனுடன் சமாதானம் செய்து கொள்ளச் சொன்னது. ஹிரண்ய கர்ப்பனையும் அவனது மந்திரியையும் பற்றி மேகவர்ணன் புகழ்ந்து ''இப்படிப்பட்டவர்களுடன் சமாதானமாகப் போவதே மேல்'' என்றது.

அப்போது சித்திரவர்ணன் ''எனக்கு அன்ன மன்னன் கப்பம் கட்டுவதானால் நான் அவனோடு சமாதானம் செய்து கொள்ளத் தயார்'' என்றது. ஆனால் இதே சமயம் ஜம்பூத்வீபத்திலிருந்து வந்த செய்திகள் அவனைக் கலக்கி



விட்டன. சிம்மள சேனுதிபதி யான நாரை ஜம்பூத்வீபத்தின் மீது திடீரெனப் படை எடுத்தே வந்து விட்டதாம்.

அப்போது சித்திரவர்ணன் ''அப்படியா? நான் இப்போதே விந்தியப்பகுதிக்குப் போய் படை எடுத்து வந்த நாரையை எதிர்த்தாக வேண்டும்'' என்றது.

அப்போது சர்வக்ஞன் ''அரசே. எதையும் யோசியாமல் அவசரப் பட்டு செய்து விடக் கூடாது. அப்படிச் செய்தால் ஆபத்தில் கொண்டு போய் விட்டுவிடும்'' என்றது.

சித்திரவர்ணனுக்கு அது உண்மைதான் எனத்தோன்றியது. உடனே சமாதானத்திற்கு ஏற்பாடு செய்யுமாறு கூறவே தூரதர்சி சமாதான தூதனுக ஹிரண்யகர்ப்பனிடம் சென்றது.

ஹிரணயகர்ப்பனும் சர்வக்ஞரிடம் ''இது ஏதாவது கபட நாடகமா? அல்லது உண்மையிலேயே இவர்கள் சமாதானத்தை நாடி வந்திருக்கிருர்களா?'' என்று கேட்டது. சர்வக்ஞனும் ''இல்லை. முழுமனதுடன் செய்யப்படும் முயற்சிதான் இது'' என்றது.

தூரதர்சி சர்வக்ஞனிடம் "நாம் இரு அரசர்களிடையேயும் சமாதானம் நிலவச் செய்வோம். ஆயிரம் அசுவமேதயாகங்கள் செய்வதை விட உண்மையின் அடிப்படையில் நிறுவப்படும் சமாதானமே நிலைத்து நிற்கும்'' என்றது.

சர்வக்ஞன் மகிழ்ச்சியுடன் அதுவே சரி எனக் கூறி இருதரப்பினரிடையேயும் சமாதானம் நிலவ வழி செய்தான். அதன் பிறகு போர் மூளவில்லை. ஜம்பூத்வீபத்தில் சித்திரவர்ணனும் கர்ப்பூரத்வீபத்தில் ஹிரண்யகர்ப்பனும் சிங்களத்தில் மேகவர்ணனும் நன்கு ஆண்டு வந்தனர்.

(முடிவுற்றது)






# 7

[தம் கப்பலை அடைய முயன்ற சமரசேனனும் அவனது வீரர்களும் எரி மலைக்கக்கலின் காரணமாக அவ்வாறு செய்ய முடியாமல் நேர் எதிர் திசையில் செல்ல வேண்டியதாயிற்று. அவர்கள் வழியில் ஒரு மனிதன் கட்டப்பட்டு மரத்தில் தொங்கியதைப் பார்த்த போது ஒரு யானைக் கூட்டம் வந்து போய் விட்டது.—அப்போது]

சமரசேனன் தன்வீரர்களை உற்சாகப் படுத்தியவாறே ஒரு உயரமான இடத்தில் நின்று சுற்றிலும் பார்த்தான். எங்கும் மனிதர் தடயமே அவனுக்குத் தென்படவில்லை. யானைக் கூட்டத்திலிருந்து தப்பியாகி விட்டது. ஆனால் தம் கப்பல்களை அடைய என்ன வழி என்றே அவன் அப்போது யோசிக்கலானான்.

அப்போது யாரோ பலமாகக் கத்துவது அவன் காதில் விழுந்தது. அந்தக் குரல் ஒற்றைக் கண்ணனதும் அல்ல, நாலு கண்ணனதும் அல்ல. வேறு யாரோ ஒருவன் ஏதோ ஒரு ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறான்.

சமரசேனன் அப்போது தன் வாளை உருவிக் கொண்டு தன் வீரர்களிடம் "என் பின்னாலேயே



பயப்படாமல் வாருங்கள்'' எனக் கூறியவாறே முன்னே ஓடினான். வீரர்களும் அவன் பின்னால் ஓடினார்கள்.

அவர்கள் போகப் போக அந்த மனிதனின் அபயக் குரல் மேலும் தெளிவாக அவர்களுக்குக் கேட்கலாயிற்று. அவர்கள் அந்த மந்திரவாதிகள் இருந்த தீவில் அப்போது தான் முதல் தடவையாக உயிருடன் உள்ள ஒரு மனிதனைப் பார்த்தார்கள்.

அவனை யாரோ நன்கு அடித்து காயப்படுத்தி மரத்தோடு சேர்த்துக் கட்டி விட்டுப் போயிருக்கிறார்கள். கைகால்களை அசைக்கக்கூட முடியாத நிலையில் இருந்த அவனைக் குதறித் தின்ன நான்கு ஓநாய்கள் வந்து அங்கு நின்று கொண்டிருந்தன. மற்றொரு புறத்தில்ஒரு புலி வேறு உறுமியவாறே அவனைப் பார்த்துக் கொண்டு நின்றது அந்த மனிதனைச் சாப்பிட புலியும் ஓநாய்களும் தம்முள் சண்டை இட்டுக் கொண்டிருந்தன. இதைக் கண்டு தான் அந்த மனிதன் அப்படி அலறி இருக்கிறான்!

புலி ஒவ்வொரு ஓநாயாக அடித்து வீழ்த்திக் கொண்டிருந்தது. எல்லா ஓநாய்களையும் அடித்து வீழ்த்திய பிறகு அந்த மனிதன் மீது பாய அது எண்ணியது போலும். இந்த சமயத்தில் சமரசேனன் அந்தப் புலிக்குக் குறி வைத்து ஒரு அம்பை எய்தான். அம்பு அடிபட்ட புலி சுருண்டு உருண்டு விழுந்தது.

புலி விழுந்ததும் ஓநாய்கள் எழுந்து வீரர்களை நோக்கிப் பாய்ந்து வந்தன. ஆனால் வீரர்கள் தம் வாட்களால் அவற்றை வெட்டி எறிந்தார்கள். இதற்குள் சமரசேனன் மரத்தருகே போய் அங்கு கட்டப்பட்டிருந்த மனிதனின் கட்டுக்களை அவிழ்த்தான்.

அந்த மனிதனும் ''ஆகா! என்னை இந்த ஆபத்திலிருந்துகாப்பாற்றக் கடவுள் போல வந்திருக்கிறீர்கள். உங்களது இந்த உத

விட்டு இரு வீரர்களுடன் தீவிற்குள் சென்ருன்'' என்று சொல்லித் தொடர்ந்தான்.

''நாங்கள் நாள் முழுவதும் அவன் திரும்பி வருவான் எனக் காத்திருந்து பார்த்தோம். அன்று இருட்டியும் போன மூவரும் திரும்பி வரவில்லை. விடியும் வேலைக்குக் கும்பன் மட்டும் திரும்பி வந்தான். மற்ற இருவரும் என்ன ஆனுர்கள் என்பதைச் சொல்லவில்லை. அது மட்டுமல்ல, எங்களிடமிருந்த வில்களையும் அம்புகளையும் வாங்கிக் கடலுக்குள் எறிந்து விட்டான். 'ஏன் இப்படிச் செய்கிறீர்கள்! 'என்று கேட்டதற்கு அவன் பதில் சொல்லாமல் ''இது என் கட்டளை. நான் சொல்கிறபடி கேட்க வேண்டும்'' என்று கூறினுன்.

அப்போது நாங்கள் அவன் மட்டும் தன் வில்லையும், அம்புகளையும் வைத்துக் கொண்டிருப்பது கண்டு ''நீ ஏன் இதனைக் கடலில் போடவில்லை?'' என்று கேட்ட போது அவன் கோபம் கொண்டு ''அது என் இஷ்டம். நீங்கள் யார் என்னைக் கேட்க? நான் உங்கள் தலைவன். நான் சொல்கிறபடிதான் நீங்கள் நடக்க வேண்டும்'' என்ருன்.

இதே சமயம் தாரை தப்பட்டைகளை அடித்து முழக்கிக்



கொண்டு காட்டி மிராண்டியர் கூட்டம் ஒன்று எங்களை நோக்கி வந்தது. எங்களிடம் ஆயுதங்கள் எதுவும் இல்லாததால் அங்கு கிடந்த கற்களையும் மரக் கிளைகளையும் எடுத்து வீசி எங்களைத் தாக்க வந்த அவர்களை எதிர்த்தோம்.

ஆனுல் கும்பனே எங்களிடம் ''இவர்களை எதிர்க்காதீர்கள். இவர்களிடம் சரண் அடைந்து விடுங்கள்'' என்ருன். அது கேட்டு நாங்கள் திகைத்துப் போனேம். இதற்குள் எம்மில் பலர் அந்தக் காட்டுமிராண்டிகளின் ஈட்டிகளுக்கு பலியாகி விட்டார்கள். மற்றவர்கள் தப்பிப்

போக வழி தெரியாமல் அந்தக் காட்டு மிராண்டிகளுக்கு அடங்கிப் போனுர்கள். கும்பன் இதை எல்லாம் பார்த்துக் கொண்டு பேசாமல் நின்ருன்.

காட்டுமிராண்டிகள் எங்களைப் பிடித்து அடித்துத் துன்புறுத்தினுர்கள். ஆனுல் கும்பனை ஒரு அழகான ஆசனத்தில் அமர்த்தித் தூக்கிக் கொண்டு மகிழ்ச்சி ஆராவாரம் செய்தவாறே நடக்கலானுர்கள். அவர்கள் இருப்பிடத்தை அடைந்த நாங்கள் அவர்களது அடிமைகளாக இருக்க வேண்டியதாயிற்று. கும்பன் அவர்களது மன்னனுகி விட்டது போல நடக்கத் தலைப்பட்டான். அவன் சொல்வதற்கு அவர்களும் கட்டுப் பட்டார்கள். இப்படி அவர்கள் நடந்து கொள்ள கும்பன் என்ன செய்தான் என்பது எங்களுக்குத் தெரியவில்லை.

இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு எங்களுக்கு அந்தக் காரணம் தெரியலாயிற்று. அந்தக் காட்டுமிராண்டிகளுக்கு வில் என்ருலும் அம்பு என்ருலும் என்ன என்று தெரிந்திருக்கவில்லை. அம்பை எய்து ஒரு மனிதனையோ மிருகத்தையோ பட்சியையோ கொல்வது அவர்களுக்கு அற்புத சக்தியாகத்



தென்பட்டது. கும்பன் அவர்களிடம் தன் ஒருவனிடமே அப்படிப்பட்ட சக்திகள் உள்ளதாகக் கூறி இருக்கிருன். இதனுல் பயந்து போன காட்டுமிராண்டிகள் அவனைத் தம் மன்னனுக ஏற்றுக் கொண்டிருக்கிருர்கள். அவன் எங்களிடமிருந்த வில்களையும் அம்புகளையும் வாங்கிக் கடலுக்குள் போட்டதும் இந்தக் காரணத்திற்காகத்தான்.

ஒரு நாள் திடீரென தப்பட்டைகள் முழங்கின. பலகாட்டுமிராண்டிகள் நாங்கள் இருக்கும் இடத்திற்கு வந்தார்கள். அவர்களின் தலைவனுக கும்பன் அட்ட

காசமாக வந்தான். அவர்கள் முன்னிலையில் தன் திறமையைக் கும்பன் காட்டினன். ஆகாயத்தில் பறந்து கொண்டிருந்த ஒரு கழுகை அவன் அம்பு எய்து கீழே வீழ்த்தினன். சற்று தூரத்தில் ஓடிக் கொண்டிருந்த ஒரு மானின் மீது அம்பை எய்து அது கீழே விழுந்து துடிதுடிக்கச் செய்தான். அது கண்டு காட்டு மிராண்டிகள் ஒரேயடியாகக் கூச்சல் போட்டு கும்பனைச் சுற்றி வந்து நடனம் ஆடினர்கள். கும்பன் அவர்களது உதவியைக் கொண்டு இந்தத் தீவின் மன்னனுக ஆக விரும்புகிருன். இதில் கொஞ்சமும் சந்தேகமே இல்லை.

இவ்வாறு அந்தப் போர் வீரன் சொல்லி முடித்ததும் சமரசேனன் புன்னகை புரிந்தவாறே ''இந்தத் தீவின் மன்னன் ஆகிருனு? அப்படி இந்தத் தீவில் என்ன பெரிய பொக்கிஷமா இருக்கிறது! ஒரே காடுகள், காட்டு மிருகங்கள் எரிமலை இரண்டொரு மந்திரவாதிகள். இவ்வளவுதானே! இதற்கா மன்னனுக விரும்புகிருன்? என்று கேட்டான்.

அப்போது அந்தப் போர் வீரன் ''மந்திர வாதிகள் இருக்கிருர்களா? அந்தக் காட்டு, மிராண்டிகள் கூட அவர்களைப் பற்றிப் பேசியதைக் கேட்டோம் அவர்கள்...'' என்று பயப் பட்டவாறே சுற்றிலும் பார்க்கலானன்.

அப்போது கணீரென்ற குரல் ''நீ கேள்விப் பட்டது மட்டுமல்ல இதோ, இப்போதே அந்த மந்திரவாதியைப் பார்க்கப் போகிருய் உன் கண் முன்னல்'' என்று ஒலித்தது. மறு நிமிடம் மந்திரவாதியான நாலு கண்ணன் தன் தொப்பியைக் கையில் வைத்துக் கொண்டு அவர்கள் முன் கம்பீரமாக நின்ருன்.

(தொடரும்)





# சரியான தண்டனையா?

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே, நீ இப்படித் தீர்மானித்தது பற்றி நான் உன்னைக் குறை கூற மாட்டேன். ஏனெனில் அரசர்கள் தம் மனம்போன போக்கில் ஏதோ தீர்மானித்து நடப்பார்கள். இதற்கு உதாரணமாக ராஜசிம்மன் என்ற மன்னனின்கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறி கதை சொல்லாயிற்று.

ராஜசிம்மன் சிம்மாசனத்தில் அமர்ந்தபோது நாடெங்கிலும்

## வேதாளம் சொல்லும் கதை

விதிக்கவில்லை? இதற்குச் சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறு விட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும் என்றது.

விக்கிரமனும் "அரசனின் நோக்கில் ஒரு திருடன் நல்லவன் மற்றவன் கெட்டவன் என்ற பாகுபாடு இருக்கவில்லை. இருவரும் செய்தது குற்றமே. ஒருவனே திருடிப் பணத்தை எல் ்ம் தன்னிடமே வைத்துக் கொண்டான். மற்றவனோ தன் திருடியதைத் தனக்கென வைத்துக் கொள்ளாமல் மக்களுக்குப் பகிர்ந்து கொடுத்ததால் அந்தத் திருடன் மக்களுக்கு லஞ்சம் கொடுத்து தன்னை அரசனிடம் காட்டிக் கொடுக்க வேண்டாம் என்பதற்கே அடிகோலினான். இதனால் அரசன் எவ்வளவு நன்மைகளைச் செய்த போதிலும் மக்கள் அது பற்றிச் சற்றும் கவலைப் படாமல் திருடனையே போற்றினார்கள். இதனால் அரசன் செய்யும் நன்மைகள் எடுபடாது போயின இப்படிப்பட்ட திருடனை விடுதலை செய்தால் அவனை மேலும் ஊக்கப் படுத்துவது போலத்தான் ஆகும். எனவே திருடன் திருடிய பின் என்ன செய்கிறான் என்பது பற்றிக் கவலைப் படாமல் அவன் செய்தது திருட்டு என்ற குற்றமே எனக் கருதியே ராஜசிம்மன் அவனுக்கும் மற்ற திருடனுக்கும் ஒரே விதமான தண்டனையை விதித்தான். அவன் செய்தது முற்றிலும் சரியே. இருவரும் திருட்டுத் தனத்தைப் செய்ததால் சட்டப் படி தண்டிக்கப் பட்டார்கள்" என்று பதில் கூறினான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலைந்தது. அதனால் அவன் சுமந்து சந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்கமரத்தின் மீது ஏறிக் கொண்டது.



விதிக்கவில்லை? இதற்குச் சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறு விட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும் என்றது.

விக்கிரமனும் "அரசனின் நோக்கில் ஒரு திருடன் நல்லவன் மற்றவன் கெட்டவன் என்ற பாகுபாடு இருக்கவில்லை. இருவரும் செய்தது குற்றமே. ஒருவனே திருடிப் பணத்தை எல்லாம் தன்னிடமே வைத்துக் கொண்டான். மற்றவனே தன் திருட்டையதைத் தனக்கென வைத்துக் கொள்ளாமல் மக்களுக்குப் பகிர்ந்து கொடுத்ததால் அந்தத் திருடன் மக்களுக்கு லஞ்சம் கொடுத்து தன்னை அரசனிடம் காட்டிக் கொடுக்க வேண்டாம் என்பதற்கே அடிகோலினான். இதனால் அரசன் எவ்வளவு நன்மைகளைச் செய்த போதிலும் மக்கள் அது பற்றிச் சற்றும் கவலைப் படாமல் திருடனையே போற்றினார்கள். இதனால் அரசன் செய்யும் நன்மைகள் எடுபடாது போயின. இப்படிப்பட்ட திருடனை விடுதலை செய்தால் அவனை மேலும் ஊக்கப் படுத்துவது போலத்தான் ஆகும். எனவே திருடன் திருடிய பின் என்ன செய்கிறான் என்பது பற்றிக் கவலைப் படாமல் அவன் செய்தது திருட்டு என்ற குற்றமே எனக் கருதியே ராஜசிம்மன் அவனுக்கும் மற்ற திருடனுக்கும் ஒரே விதமான தண்டனையை விதித்தான். அவன் செய்தது முற்றிலும் சரியே. இருவரும் திருட்டுத் தனத்தைப் செய்ததால் சட்டப் படி தண்டிக்கப் பட்டார்கள்" என்று பதில் கூறினான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலைந்தது. அதனால் அவன் சுமந்து சந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்கமரத்தின் மீது ஏறிக் கொண்டது.



கள் செய்து வந்த தொழில் திருட்டே. உங்கள் ஆட்சிக்கு முன் நான் திருட்டுத்தனம் செய்தது குறித்து வருந்தவில்லை. உங்கள் ஆட்சியில் நான் கற்ற கலை வீணுகக் கூடாதே என்பதற்காகவே திருடினேன். அதைக் கொண்டு சுகமாா வாழ்ந்து வருகிறேன். ஆனுல் இந்த மற்ற திருடனுே என் மாதிரி இல்லாமல் ஆரம்பத்திலிருந்தே தான் திருடியவற்றை ஏழைகளுக்கே பகிர்ந்து கொடுத்து வருகிறுன். அவன் தனக்காக எதையும் பயன்படுத்திக் கொள்ளவில்லை தான் திருடியவற்றை எல்லாம் எல்லோருக்கும் கொடுத்து விட்டான்'' என்றுன். அதைக் கேட்ட ராஜசிம்மனுே இரு திருடர்களுக்கும் ஆயுட்கால தண்டனை விதித்தான்.

வேதாளம் இக் கதையைக் கூறி ''மன்னனே! இரு திருடர்களும் திருடிய போதிலும் இருவரின் நடத்தைகளும் மாறுபட்டவை என ராஜசிம்மன் விசாரணையின் போது தெரிந்து கொண்டானே. அப்படி இருந்தும் ஏழைகளுக்குத்தான் திருடியதைப் பகிர்ந்து கொடுத்த திருடனுக்கும் ஆயுள் கால தண்டனை, தான் திருடியதைத்தானே வைத்துக் கொண்டவனுக்கும் அதே தண்டனை என ஏன் ஒரே தண்டனையை விதித்தான்? ஏன் வெவ்வேறு தண்டனைகளை





குழப்பமே இருந்தது. திருட்டுகள் கொலைகள் அதிகமாக இருந்தன. மக்கள் வாழ்வு மிகவும் சீர் குலைந்து சட்டம் ஒழுங்கு என்பதே இல்லாது இருந்தது. ராஜ சிம்மன் கடும் நடவடிக்கைகளை மேற்கொண்டு சட்டப்படி குற்றவாளிகளைத் தண்டித்து ஓரளவு ஒழுங்கை நிலை நாட்டினான். மக்களும் நல்வாழ்வு கிடைத்ததற்காக மகிழ்ந்தனர்.

ஆனால் ராஜசிம்மனால் திருட்டுத் தனத்தை முற்றிலும் போக்கிவிட முடியவில்லை. இரண்டு கைதேர்ந்த திருடர்கள் தம் கைவரிசையைக் காட்டிக் கொண்டே இருந்தார்கள். அவர்கள் தம் தொழிலைத் தனித் தனியே வெவ்வேறு இடங்களில் செய்து வந்தது நன்கு தெரிந்தது. இதனால் இரு திருடர்கள் இருப்பது அரசனுக்கு நன்கு தெரிந்தது அவர்களைப் பிடிப்பதும் கஷ்டமாக இருந்தது. ஏனெனில் திருடர்கள் தாம் திருடியதை ஏழை மக்களுக்குக் கொடுத்து வந்தனர். அதனால் ஏழைகள் அவர்களை அரசாங்க வீரர்களுக்கு அகப்படாமல் செய்தும் அவர்களைப் பற்றி யாராவது விசாரித்தால் தகவல் கொடுக்க மறுத்தும் வந்தார்கள். அத் திருடர்களைப் பிடிக்கப் பலர் பலயோசனைகள் கூறினார்கள்.

ஆனால் மன்னனே அத்திருடர்களைப் பிடிக்க வேண்டுமானால் தானும் ஒரு திருடன் போல நடித்து அவர்களைக் கண்டு பிடிக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான். அவன் அவ்வாறு வேஷம் போட்டுக் கொண்டு நகரில் திரிந்து முடிவில் அந்த இரண்டு திருடர்களையும் பிடித்தும் விட்டான்.

அரசன் அவர்களைத் தன் தர்பாரில் நிறுத்தி விசாரணை நடத்தினான். ஒருவன் தான் திருடனே என ஒப்புக் கொண்டான் ஆனால் மற்றவனோ ''அரசே, நீங்கள் ஆட்சிக்கு வருமுன் நாங்



# சரியான தண்டனையா?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே, நீ இப்படித் தீர்மானித்தது பற்றி நான் உன்னைக் குறை கூற மாட்டேன். ஏனெனில் அரசர்கள் தம் மனம்போன போக்கில் ஏதோ தீர்மானித்து நடப்பார்கள். இதற்கு உதாரணமாக ராஜசிம்மன் என்ற மன்னனின்கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறி கதை சொல்லாயிற்று.

ராஜசிம்மன் சிம்மாசனத்தில் அமர்ந்தபோது நாடெங்கிலும்

## வேதாளம் சொல்லும் கதை

# அவன் விரும்புவது அது!

**வி**யாபாரத்தில் வீரப்பன் தன் மகன் சொக்கப்பனை ஈடுபடுத்தப் பார்த்தான். ஆனால் முடியவில்லை. பட்டணத்தில் நன்கு வியாபாரம் செய்யும் அழகப்பன் ஒரு முறை வீரப்பனைக் காண வரவே அவனிடம் சொக்கப்பனைப் பற்றி வீரப்பன் கூறிக் குறைப்பட்டுக் கொண்டான்.

அப்போது அழகப்பன் ஒரு கடிதம் எழுதி சொக்கப்பனிடம் கொடுத்து ''இதைப் பட்டணத்தில் என் வீட்டில் என் மனைவியிடம் கொடு. நான் நாளை வந்து சேர்கிறேன்'' என்றான்.

சொக்கப்பனும் பட்டணம் போய் அழகப்பனின் மனைவியிடம் கடிதத்தைக் கொடுத்தான். அழகப்பனின் மனைவி சொக்கப்பனைச் சாப்பிடச் சொல்லி ''என் மருமகள் மகாவாயாடி. என்னைப் பிய்த்து எடுத்து விடுகிறாள். என்றாவது அவளும் மாமியாராகத் தானே போகிறாள்'' என்றாள்.

அது கேட்டு சொக்கப்பன் ''பழுத்து உதிரும் இலைகளைக் கண்டு இளந்துளிர்கள் பரிகசிக்கும். அப்போது அவை தாமும் ஒரு நாள் பழுத்து உதிர வேண்டியவையே என நினைப்பதில்லை'' என்றான்.

இதேசமயம் மருமகள் வரவே மாமியார் வெளியே போய் விட்டாள். மருமகள் சொக்கப்பனுக்குப் பரிமாறியவாறே ''என் மாமியாருக்கு உள்ள கெட்ட குணம் யாருக்கும் இல்லை. எப்போதும் 'நீயும் ஒரு நாள் மாமியாராகிப் படாதபாடு படப்போகிறாய்' என்கிறாள்'' என்று சொன்னாள்.

சொக்கப்பனும் ''எல்லோரும் இறந்து போகிறார்கள். தானும் ஒரு நாள் இறக்க வேண்டும் என்று யாராவது சிறு வயது முதலே கட்டைகளைச் சேர்த்து வைப்பானா!'' என்றான்.

அழகப்பன் வீட்டிற்கு வந்து தன் மனைவியும் மருமகளும் சொக்கப்பன் கூறியதைச் சொல்லக் கேட்டு வீரப்பனுக்கு ''உன் மகனை அதிகாரியாக்குவது சரி. வியாபாரம் வேண்டாம்'' என எழுதினான்.





# மனம் மாறுமே!

சாந்தப்பன் சங்கனூரில் இருந்தான். யாருடனும் அதிகமாகப் பேசமாட்டான். சாந்தப்பனின் மனைவி சாந்தா அவனுக்கு நேர் மாறானவள் அவள் வாய்க்கு ஊரே பயப்பட்டது. அவள் எப்படிப் பணம் சேர்ப்பது என்றேகுறியாக இருப்பாள். அதற்காகவே சாந்தப்பன் அவனது ஊரிலிருந்து சங்கனூருக்கு அழைத்து வந்து தனிக் குடித்தனம் போட வைத்தான். அவள் தான் சேமித்த பணத்தில் நகைகளைச் செய்து போட்டுக் கொண்டும் வந்தாள்.

ஒருமுறை சாந்தப்பனின் தம்பி கந்தப்பன் புனித ஸ்தலங்களுக்குப் போய்வர எண்ணினான். தன்னிடம் இருந்த ஆயிரம் ரூபாயை பத்திரமாக எங்கு வைப்பது என யோசித்து முடிவில் சங்கனூருக்கு வந்து தன் அண்ணனிடம் கொடுத்து பத்திரமாக வைத்திருக்குமாறும் திரும்பி வந்து வாங்கிக் கொள்வதாகவும் கூறிச் சென்றான்.

ஒரேயடியாக அவ்வளவு பணத்தைப் பார்த்ததும் சாந்தாவிற்குத் தானே அந்தப் பணத்தை வைத்துக் கொண்டுவிட வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. சில நாட்களானதும் அவள் தன் கணவனிடம் ''இதோ பாருங்கள். என் இரட்டை வடம் தங்கச் சங்கலியை நாளை நீங்கள் பட்டணம் போகும் போது எடுத்துப் போய் அதில் மேலும் ஒரு வடம் சேர்த்து மூன்று வடச் சங்கிலியாக்கிக் கொண்டு வாருங்கள்'' என்றாள் சாந்தப்பனும் ''இதற்குப் பணம் வேண்டுமே'' எனவே அவளும் ''பணம் தான் கந்தப்பன் உங்களிடம் கொடுத்துப்

தேவகி இராஜலிங்கம்

போயிருக்கிருனே. அவன் பணம் அன்னியர் பணமா என்ன? சிறு வயதில் அவனை நான் என் மகனைப் போல வளர்க்கவில்லையா? மகன் தாய்க்குப் பணம் கொடுப்பது போலக் கொடுத்திருக்கிருன். அவனிடம் நான் சொல்லிக் கொள்கிறேன்'' என்ருள்.

அவளிடம் மேலும் பேசினுல் வீண் சண்டைதான் என எண்ணிய சாந்தப்பன் அவன் கூறியது போலவே செய்வதாகச் சொல்லி மறுநாள் அவளது இரட்டை வட தங்கச் சங்கிலியையும் தன் தம்பியின் ஆயிரம் ரூபாயையும் எடுத்துக் கொண்டு கிளம்பினுன். அவன் பட்டணத்தை அடைந்து தான் வழக்கமாகத் தங்கும் சத்திரத்தை அடைந்தான். அங்கு தன் தம்பியும் யாத்திரீகர்களோடு தங்கி இருப்பது கண்டு மகிழ்ந்தான்.

கந்தப்பனும் ''நான் நாளை ஊருக்கு வருவதாக இருந்தேன். என் பணத்தை வாங்கிக் கொண்டு ஊர் திரும்புகிறேன்'' என்ருன்.

சாந்தப்பனும் ''ஊருக்கு நீ பணத்திற்காகத்தானே வர விரும்புகிருய். உன் பணம் இதோ இருக்கிறது. பிடி'' எனக் கூறி அவனது ஆயிரம் ரூபாயோடு தன் மனைவியின் தங்கச் சங்கிலியையும் கொடுத்தான்.

அது கண்டு கந்தப்பன் திகைத்துப் போய் ''இந்த சங்கிலி எனக்கு எதற்கு?'' என்ருன். சாந்தப்



பனும் தன் மனைவியின் எண்ணத்தைக் கூறி ''அவள் உன் பணத்தை ஒரு மகன் தாய்க்குக் கொடுப்பது போல நினைத்தாள் என்றால் நீ இந்தச் சங்கிலியை ஒரு தாய் தன் மகனுக்குக் கொடுத்தது போல நினைத்து எடுத்துக் கொண்டுபோ. அவளுக்கு ஒரு நல்ல பாடம் கற்பித்தது போலாகும்'' என்று கூறினான்.

மறுநாள் சாந்தப்பன் தன் ஊருக்கு வந்ததும் சாந்தா ''சங்கிலி எங்கே?'' என்று ஆவலுடன் கேட்டாள். சாந்தப்பனே ''பட்டணத்தில் நான் என் தம்பியைப் பார்த்தேன். அவனும் உன் நகையை வாங்கிக் கொண்டு, ஒரு தாயின் நகையை மகன் வாங்கிக் கொள்ள உரிமை பெற்றவன் தானே, எனக் கூறி எடுத்துக் கொண்டு போய் விட்டான்'' என்றான்.

சாந்தாவோ ''ஐயோ! என் ஐந்து பவுன் சங்கில் போயிற்றே! இப்படி யாராவது தம்பியிடம் சங்கிலியைக் கொடுத்து விட்டு வருவார்களோ?'' எனத் தன் கணவனைத் திட்டி நொறுக்கினாள்.

சற்று நேரத்திற் கெல்லாம் கந்தப்பன் தன் அண்ணனின் வீட்டிற்கு வந்தான். அவன் அவளது நகையை அவளிடம் கொடுத்து ''அண்ணாவிடமிருந்து இதனையும் என் பணத்தையும் வாங்கிக் கொண்டேன். ஆனால் எனக்கு என் பணம் போதும். இந்த நகை எதற்கு? இது உங்களுடையதுதான். பிறர் பொருளுக்கு நான் ஏன் ஆசைப்பட வேண்டும் அது எனக்கு வேண்டாம். என் பொருளே எனக்குப் போதும்'' என்று சொன்னான்.

அப்போதுதான் சாந்தாவுக்கு போன உயிரே திரும்பியது போலாயிற்று. கந்தப்பனே சிரித்தவாறே தன் ஊருக்குத் திரும்பினான்.



# வேலைக்கு வேண்டாம்!

ஆறுமுகம் என்பவன் அண்ணாமலை என்பவரிடம் புதிதாக வேலைக்குச் சேர்ந்தான். ஒரு நாள் அண்ணாமலை தன் கடைக்கு வந்து தம் சட்டையைக் கழற்றிய போது அவரது சட்டைப் பையிலிருந்து நாணயங்கள் சிதறி ஓடின. ஆறுமுகம் சட்டென அவற்றைப் பொறுக்கி அண்ணாமலையிடம் கொடுத்தான்.

அன்றிரவு வீட்டில் அண்ணாமலை சாப்பிட்டு விட்டுக் கைக்கழுவ எழுந்து சென்றார். அவரது மனைவி அவர் சாப்பிட்ட தட்டைக் கழுவ எடுத்துப் போன போது ஆறுமுகம் ஓடி வந்து அந்தத் தட்டில் விழுந்து கிடந்த மோதிரத்தை எடுத்துப் போய் அண்ணாமலையிடம் கொடுத்தான்.

அண்ணாமலை அப்போதே ஆறுமுகத்தை வேலையிலிருந்து நீக்கி விட்டார். அது கண்டு அவர் மனைவி ஆச்சரியப்பட்டு காரணம் கேட்ட போது அவர் ''இவன் எப்போதும் என்னையே கண்காணிக்கிறான். அன்று கடையில் சில்லறைக் காசுகள் விழுந்த போது எடுத்துக் கொடுத்தான். இன்று என் கையில் மோதிரம் இல்லாதது கண்டு சாப்பாட்டுத் தட்டிலிருந்து எடுத்தான். இப்படி என்னைக் கண்காணிப்பவனை நான் வேலையில் வைத்துக் கொள்ளக் கூடாது'' என்றார்.





# இவர்களா பக்தர்கள்!

கனகபுரத்து மணியக்காரர் கனக ராஜன் தர்ம சிந்தை உள்ளவர். அவர் ஏழை எளியவர்களுக்கு உணவளிப்பார். அவர் சித்திரா பௌர்ணமியிலிருந்து ஒரு மாத காலத்திற்கு அன்னதானம் செய்வார். அந்த சாப்பாடு வடை பாயசம், பட்சணங்களோடு இருக்கும். அதனால் தூர தூர ஊர்களில் இருந்து சாதுக்களும் கூன் குருடு செவிட்டுப் பிச்சைக்காரர்களும் வந்து ஒரு மாதகாலம் அந்த ஊரில் இருந்து சாப்பிட்டு விட்டுப் போவார்கள்.

ஒரு வருடம் அவரது மனைவி அவரிடம் ''இந்த வருடம் ஏழை எளியவர்களுக்கெல்லாம் சாப்பாடு போடாதீர்கள். இவர்களுக்குப் போட்டால் புண்ணியமா கிடைக்கும்? சாது சன்னியாசிகள் கடவுளின் அவதாரம். அவரது பக்தர்கள். அவர்களுக்கு சாப்பாடு போட்டால் நாம் புண்ணியம் நிறையப் பெறலாம்'' என்றாள்

கனகராஜன் சிரித்தவாறே 'அட பாவமே! நீ தாடி மீசை வைத்த இந்த சன்னியாசிகளை எல்லாம் பக்த சிகாமணிகள் என்று நினைத்து விட்டாய்? காவி உடைதரித்து சடைமுடிகளுடன் விளங்கி விட்டால் பக்தர்கள் ஆகிவிட மாட்டார்கள். அவர்களிடம் பக்தியே இல்லை. எல்லால் வீண் பகட்டு. நான் சொல்கிறபடி இந்த முறை பரீட்சித்துப்பார். உனக்கு உண்மை விளங்கும்'' எனக் கூறி அவளிடம் அவர்களைப் பரீட்சிக்கும் விதத்தையும் கூறினார்.

அம்முறை சித்திரா பௌர்ணமி வந்தது. முதல் நாள் சாது சன்னியாசிகள் கனகராஜனின் வீட்டிற்கு வந்து ஏதோ உரிமை உள்ளவர்

ஜானகி கிருஷ்ணன்

கள் போல எல்லோருக்கும் முன்ன தாகப் போய், இடம் பிடித்து உட்கார்ந்து கொண்டார்கள். இடம் கிடைக்காதவர்கள் அடுத்த பந்திக்குக் காத்து நின்றார்கள்.

அப்போது கனகராஜனின் மனைவி மூக்குப் போசிகளில் கஞ்சி கொண்டுவந்து வைத்து ''மகாத்மாக்களே! இம்முறை விளைச்சல் சரியில்லை. அதனால் உங்களுக்கு இந்த கஞ்சிதான் கொடுக்க முடியும். இதனை ஏற்கவேண்டுகிறோம்" என்றாள்.

உடனே அங்கே உட்கார்ந்திருந்த தாடி, மீசை கொண்ட எல்லா சாது சன்னியாசிகளும் எழுந்து ''சீச்சீ! இதற்காகவா நாங்கள் வெகு தூரத்திலிருந்து வந்தோம்? யாருக்கு வேண்டும் இந்தக் கஞ்சி? எங்களுக்கு ராஜோபசாரம் செய்ய எவ்வளவோ பேர்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள். நாங்கள் ஒன்றும் பிச்சைக்காரர்கள் அல்ல'' என்று கூறி விட்டு எழுந்ததோடு நில்லாமல் கஞ்சி இருந்த மூக்குப் பாத்திரங்களை எட்டி உதைத்து விட்டு அங்கிருந்து போய் விட்டார்கள்.

இரண்டாவது பந்திக்குக் காத்திருந்த சாது சன்னியாசிகளும் தமக்குக் கஞ்சி தான் கிடைக்கும் என்பதை அறிந்ததும் ''ஏதோ நல்ல சாப்பாடு கிடைக்கும் என்று வந்தால் இந்த கஞ்சியா கிடைக்கிறது. இதற்காகவா நாங்கள் வெகு தூரத்திலிருந்து வந்தோம்?



இந்த மாதிரிக் கஞ்சி எங்கு போனு லும் கிடைக்குமே. இந்தக் கஞ்சி வேண்டவே வேண்டாம். நீங்கள் உங்கள் தலையில் கொட்டி கொள்ளுங்கள்'' என்று கோபத் தோடு கூறி விட்டுப் போய் விட் டார்கள்.

அப்போது வீட்டிற்கு வெளியே நின்ற கூன் குருடு செவிடு போன்ற பிச்சைக்காரர்களை உள்ளே வரவிடாமல் கனகராஜனின் மனைவி தன் வீட்டின் வீட்டுத் திண்ணையில் நின்றபடியே 'இதோ பாருங்கள். எல்லாருக்கும் இந்த வருடம் கஞ்சிதான். அதுவும் ஆளுக்கு ஒரு குவளை தான் கிடைக் கும்'' என்ருள்.

அப்போது அந்த பிச்சைக்காரர் கள் ''அம்மணீ, நாங்கள் தினமும் வடை பாயசத்துடன் விருந்துச் சாப்பாடா சாப்பிடுகிருேம்! ஏதோ கிடைக்கிறதைக் கொண்டு வயிற்றை நிரப்பிக் கொள்கிருேம். நீங்கள் இதைக் கொடுத்து எங்கள் பசியைப் போக்குவது எங்களுக்கு பரம திருப்தியே. இப்படி ஏழை எளியவர்களுக்குச் சாப்பிடக் கொடுக்கவேண்டும் என எண்ணி உங்களால் முடிந்ததைக் கொடு கும் புண்ணியாத்மாக்களாகிய நீங் கள் நெடுநாட்கள் நன்கு வாழ வேண்டும்'' என வாயார வாழ்த்தி ஞர்கள். அவர்கள் அங்கேயே உட்கார்ந்து தமக்குக் கிடைத்த கஞ்சியை குடித்து விட்டு மனதார அவர்களை வாழ்த்தி விட்டுச் சென் ருர்கள்.

அப்போது கனகராஜன் தம் மனைவியிடம் ''பார்த்தாயா?'' எனவே அவளும் ''ஆமாம். உண் மையிலேயே பசித்துச் சாப்பிடுப வனுக்குப் போட்டால் புண்ணியம். சாது சன்னியாசி என ஆஷாடபூதி களாகத் திரிபவர்களைக் கடவுளின் மறு அவதாரம் என எண்ணியது என் தவறே. இந்த ஏழைகளின் சிரிப்பில் தான் இறைவன் இருக் கின்ருன்'' என்ருள்.





# தகுதி எது?

**போ**திசத்வர் பிரம்மதத்தன் காசியை ஆண்ட காலத்தில் அவனது பண்டகசாலை அதிகாரியாக இருந்தார். அரசாங்கத்திற்கு வாங்கும் எந்தப் பொருட்களையும் மதிப்பிட்டு விலை கொடுப்பது பண்டக சாலை அதிகாரியின் வேலை. அவரும் பொன், குதிரை, தங்க, வெள்ளி நகைகள், பாத்திரங்கள் முதலியவற்றிற்குச் சரியான மதிப்புப் போட்டு விலை கொடுத்து வாங்கி வந்தார். விலைக்கு விற்றவர்களும் அவர் கூறிய விலை நியாயமானதே என்று ஏற்று மகிழ்ச்சியுடன் அந்த விலைக்கான பணத்தை வாங்கிச் சென்றனர்.

ஆனால் ஒரு நாள் திடீரெனக் காசி மன்னன் மனதில் போதிசத்வர் கொடுக்கும் விலையைப் பற்றி சந்தேகம் ஏற்பட்டது. அவர் அதிக விலை கொடுத்து வருகிருரோ அல்லது வாங்கும்போது கொஞ்சம் பணத்தைத் தான் எடுத்துக் கொண்டு மீதப் பணத்தைப் பொருளை விற்பவனுக்குக் கொடுக்கிருரோ என மன்னன் நினைக்கலானுன். அப்போது தன் அறை சன்னலைத் திறந்தான். தோட்டத்தில் நெற்றி வியர்வை நிலத்தில் விழ தோட்டக்காரன் அங்கு வேலை செய்து கொண்டிருப்பதை அவன் பார்த்தான்.

அவன் ''ஆகா! இந்தத் தோட்டக்காரன் எவ்வளவு உண்மையாக வேலை பார்க்கிருன். இவனை போதி சத்வருக்கு பதிலாகப் பண்டகசாலை அதிகாரியாக நியமிக்கிறேன். இப்படி உண்மையாகப் பாடுபடுபவன் எல்லா வேலைகளிலும் உண்மையுடன் நடந்து கொள்வான். கொஞ்சமும் ஏமாற்ற மாட்டான்'' என



எண்ணி உடனேயே அவனை அப் பதவியில் அமர்த்தினான். போதி சத்வரை வீட்டிற்கு அனுப்பி விட்டான்.

புதிய அதிகாரிக்கு வியாபாரத் தில் அனுபவம் இல்லாததில் தன் இஷ்டம் வந்தபடி பொருட்களின் விலைகளை மதிப்பிடலானான். அது மிகமிகக் குறைவாக இருந்தாலும் தாம் அரசாங்கத்திற்கு கொடுக் கிறோமே என பயந்து பொருளை விற்பவர்கள் அந்த அதிகாரி கொடுத்த விலையை வாங்கிக் கொண்டு மனம் புழுங்கியவாறே சென்றனர்.

ஒரு நாள் அயல் நாட்டிலிருந்து ஒரு குதிரை வியாபாரி தன் ஐநூறு உயர் ரக குதிரைகளை விற்க காசிக்கு வந்தான். புதிய அதி காரி அக்குதிரைகளை மதிப்பிட்டு விட்டு ''இவற்றின் மதிப்பு அரைப் படி அரிசியே. இவனுக்கு அரைப் படி அரிசியைக் கொடுத்து விட்டு குதிரைகளைக் கொண்டு போய் நம் லாயத்தில் கட்டுங்கள்'' என்றான்.

குதிரை வியாபாரி திகைத்துப் போனான். அவன் அந்த விலைக்கு விற்கச் சம்மதிக்காமல் நேராகத் தனக்கு தெரிந்த முந்தைய அதி காரியாக இருந்த போதிசத்வரி டம் போய் நடந்ததைக் கூறி" இது அநியாயம். ஐநூறு குதிரைகளின் விலை அரைப்படி அரிசியாம்! நீங்களே சொல்லுங்கள், இது அக் கிரமம் இல்லையா? இப்படியா என் வியாபாரத்தில் மண்ணைப் போட வேண்டும்?'' என்றான்.

போதிசத்வரும் ''இந்தப் புது அதிகாரியை சந்தோஷப் படுத்த முதலில் அவனுக்குக் கொஞ்சம் பணம் கொடு. பிறகு அவர் குதி ரைகளுக்கு மதிப்புப்போட்ட விலை மிகச் சரியானதே என்றும் ஆனால் அந்த அரைப்படி அரிசியின் விலை என்ன என்பதை அரச சபையில் எல்லோர் முன்னிலும் சொல்ல வேண்டும் எனக்கேட்டுக் கொள். அவன் இதற்கு இணங்கினால் நாளை அரச சபைக்கு அழைத்துப் போ. அப்போது நானும் அங்கு

வருகிறேன். உனக்கு நியாயம் கிடைக்கச் செய்கிறேன்'' என்றார்

அந்தக் குதிரை வியாபாரியும் போதிசத்வர் கூறியது போலவே புதிய அதிகாரியைக் கண்டு கொஞ்சம் பணம் கொடுத்து போதிசத்வர் கூறியது போலவே அரச சபைக்கு வந்து அந்த அரிசியின் விலையை அவனால் கூற முடியுமா என்று கேட்டான்.

அந்த அதிகாரியும் ''ஏன் முடியாது? நாளையே நான் அரச சபையில் அதன் விலையைக் கூறுகிறேன். கவலைப் படாதே" எனக் கூறினான். மறு நாள் அரசசபையில் ஏராளமாக மக்கள் கூடி இருந்தார்கள். போதிசத்வரும் அரசரின் அனுமதி பெற்று வந்து அமர்ந்திருந்தார்.

அப்போது அந்தக் குதிரை வியாபாரி பண்டக சாலை அதிகாரியோடு அரசனின் முன் வந்து ''அரசே. இவர் என் குதிரைகளின் விலை அரைப்படி அரிசி என்றார். அந்த அரைப்படி அரிசியின் விலை என்ன என்பதை இவர் இப்போது கூற வேண்டும்'' என்றான்.

அரசனும் ''அப்படியா! ஐநூறு குதிரைகளின் விலை அரைப்படி அரிசி என்றால் அந்த அரைப்படி அரிசியின் விலை என்ன?'' என்று தன் பண்டக சாலைப் புதிய அதிகாரியிடம் கேட்டான். அரசனுக்கு அதற்கு முன் என்ன நடந்தது



என்பது தெரியவில்லை தான். பண்டக சாலை அதிகாரியும் சற்றும் தயங்காமல் ''அந்த அரைப்படி அரிசியின் விலை இந்தக் காசி ராஜ்யமும் இதன் கீழே உள்ள மற்ற நாடுகளும் எவ்வளவு விலை பெறுமோ அவ்வளவு விலையாகும்" என்றான்.

இந்த பதிலைக் கேட்டதும் சபையில் இருந்த மந்திரிகளும் மற்ற அதிகாரிகளும் கூடியிருந்த மக்களும் 'கொல்'லென்று சிரித்தார்கள். கைதட்டிக் கேலி செய்தார்கள். அப்போது வேறு ஒரு வியாபாரி ''அரசே! இவ்வளவு நாட்களாக எல்லோரும் நம் நாட்டை விலைமதிப்பிட முடியாதது என

எண்ணி வந்தோம். நாமெல்லாம் எவ்வளவு பெரிய மூடர்கள் என்பது இப்போது தெரிகிறது! இந்த அதிகாரி தன் அபார அறிவால் நம் நாட்டோடு மற்ற நாடுகளையும் சேர்த்து விலை மதிப்பு போட்டு அரைப்படி அரிசி எனக் கூறி விட்டாரே; ஆகா! என்ன அறிவு!! எவ்வளவு திறமை!!'' என்று நையாண்டி செய்தான்.

அப்போது போதிசத்வர் எழுந்து ''இந்த அதிகாரி கூறுவது உண்மையே. இவரைக் கேலி செய்யாதீர்கள். ஐநூறு குதிரைகளின் விலை அரைப்படி அரிசி என்றார். அவர் அரைப்படி அரிசி விலை என்ன என்று கேட்ட போது அவர் இந்த நாடும் இதன் கீழுள்ள நாடுகளும் சேர்ந்த விலை என்றார். எனவே ஐநூறு குதிரைகளின் விலை இந்த நாடும் இதன் கீழுள்ள நாடுகளும் பெறும் மதிப்பிற்குச் சமம் என்று ஆகிறது. எனவே அந்த வியாபாரிக்கு இந்த விலை கொடுப்பது சரிதானே'' என்றார். இதைக் கேட்ட எல்லோரும் திகைத்துப் போனார்கள். அரசனுக்கும் அப்போது தன் தவறு தெரிந்தது. தகுதி இல்லாத ஒருவனுக்கு உயர்பதவி அளிப்பதால் எவ்வளவு கெடுதல் விளையும் என்பதை அவன் அப்போது உணர்ந்தான். உடனே அந்த அதிகாரியை விசாரிக்கவே அவன் முன் தினம் நடந்ததை எல்லாம் கூறி தான் அந்த வியாபாரியிடம் பணம் பெற்றுக் கொண்டு அரசசபையில் குதிரைகளின் விலையைக் கூற இசைந்ததையும் சொன்னான்.

உடனே அரசன் ''இப்படி நீ லஞ்சம் வாங்கியதால் பதவியில் இருக்கத் தகுதி இல்லாதவன். உன்னை இப்போதே இப்பதவியிலிருந்து நீக்குகிறேன்'' எனக் கூறி அவனைப் பதவியிலிருந்து நீக்கி விட்டான். பிறகு அவன் போதி சத்வரையே மீண்டும் அப்பதவியில் அமர்த்தினான்.





# புத்தரின் தேக முக்தி

புத்தரின் இரு சீடர்கள் சாரிபுத்திரரும் மௌட்கல்யரும் ஆவர். அவர்கள் புத்தமதத்தை நன்கு பரப்பி வந்தார்கள். அவர்கள் புத்தரது ஆசிகளோடு வெவ்வேறு பகுதிகளில் இருந்தார்கள்.

சில வருடங்களுக்குப் பின் சாரி புத்திரருக்குத் தன் முடிவுகாலம் வரப்போவது தெரிந்து விட்டது. அவர் புத்தரை தரிசித்து விட்டு அவரது ஆசிகள் பெற்றுத் தன் தாயின் ஊருக்குச் சென்றார். அங்கு தன் தாயையும் புத்தமதத்தில் சேர்த்த பின் ஒரு நாள் சூரியோதய வேளையின் போது அவரது தேகம் முக்தி பெற்றது.





மௌட்கல்யர் போதனை செய்த போது சிலர் அவர் மீது ஆத்திரம் கொண்டார்கள். அவர்கள் அவரைக் கொல்ல ஒரு முரடனை அனுப்பினார்கள். ஆனால் அந்த முரடன் தன் குடிலில் நுழைவதை கண்ட மௌட்கல்யர் தன் சக்தியால் உயரக் கிளம்பி ஆகாயத்தில் சென்று அவன் கையில் அகப்படாமல் தப்பினார்.



இவ்வாறு பல முறைகளில் மௌட்கல்யர் தம்மைக் கொல்ல வந்தவர்களிடம் இருந்து தப்பினார். ஆனால் ஒரு முறை ஒரு முரடன் அவனது குடிலில் நுழைந்து தன்கையிலிருந்த தடியை உயர்த்தி அவரது தலையில் அடிக்கப் போனான். அப்போது அவருக்குத் தன் முன் பிறப்பைப் பற்றிய நினைவு வந்தது.

முன் பிறப்பில் அவர் தன் தாய் தந்தையர்களை ஒழிக்கும் நோக்கத்தோடு அவர்களை ஒரு காட்டிற்குள் அழைத்துப் போய் ஒரு மரத்தடியே உட்கார வைத்து விட்டு மறைவில் போய் ஒட்டு மீசை தாடிகளை வைத்துக் கொண்டு வந்து அவர்களைத் தாக்கினார். அப்போது அவர்கள் ''மகனே! யாரோ எங்களைத் தாக்குகிறான். நீ தப்பி ஓடி விடு. இங்கே வராதே'' என்று கத்தினார்கள். அப்போது அவர் மனம் இளகியது.





அங்கிருந்து அவர் சற்று தூரம் போய்த் தம் தாடி மீசைகளைப் பிய்த்து எறிந்தார். பிறகு தம் தாய் தந்தையர்கள் இருக்கும் இடம் வந்து அவர்களை வீட்டிற்கு அழைத்துச் சென்றார். முன் பிறப்பை பற்றிய நினைவு அவருக்கு வந்ததும் அவரது சக்தி நசிந்தது. முரடன் அவரை அடித்துப் போட்டு விட்டுப் போனான். குற்றுயிராகக் கிடந்த அவர் எழுந்து புத்தர் இருக்கும் இடம் அடைந்து அவரது காலடிகளில் உயிரை விட்டார்.

அப்போது புத்தருக்கு வயது எண்பது. ஒரு நாள் அவர் வைசாலி நகருக்கு வந்தார். மிக அழகியும், அரச சபையின் நடன மாதுமான அம்பபாலி அவரைக் கண்டு அவரையும் அவரது சிடர்களையும் தன் வீட்டில் விருந்துக்கு அழைத்தாள். அவர்கள் தங்கவும் தன் பூங்காவில் ஏற்பாடு செய்தாள். புத்தரும் அந்த அழைப்பை ஏற்ருர்.





இதைக் கேட்ட சில பிரமுகர்கள் அவரைக் கண்டு தம்மோடு வந்து சாப்பிடும்படியும் அம்பபாலியின் விருந்தை ஏற்கக் கூடாது என்றும் கூறினுர்கள். அப்போது புத்தர் '' கங்கை நதியும் கிருஷ்ண நதியும் சமுத்திரத்தில் கலந்து பின் அவற்றின் தனித் தன்மை ஏது? அது போல என் உபதேசங்களைக் கேட்டு என்னோடு சேர்ந்தவர்களிடையே பாகுபாடு கிடையாது'' என்ருர்.

பின்னர் புத்தர் தம் சீடர்களிடம் ஒரு நாள் தான் இன்னும் மூன்று மாதத்தில் தேக முக்தி அடைந்து விடப்போவதாகக் கூறினுர். சீடர்கள் கண்ணீர் உகுக்கவே அவர் '' மரணத்தை யாரும் தவிர்க்க முடியாது. நான் போனுலும் என் போதனைகள் உங்களுக்கு உறுதுணையாக இருக்கும்'' என்ருர்.





புத்தர் வைசாலியிலிருந்து பாவா நகரத்திற்கு வந்தார். அங்கு சுந்தன் என்ற அவரது சீடன் அவருக்கு பக்தியுடன் உணவளித்தான். அவன் அளித்தது மாமிச உணவாயினும் புத்தர் அது தனக்குக் கேடு விளைவிக்கும் என உணர்ந்தும் அதைப் புசித்தார்.

அந்த உணவைச் சாப்பிட்டதும் அவரது உடல் நலம் குன்றியது. அவர் தம் சீடர்களிடம் தம் கடைசி காலம் வந்துவிட்டதைக் கூறினார். அவரை கடைசி முறையாக காண மக்கள் திரளாகக் கூடினார்கள். அந்த நிலையிலும் புத்தர் கூடியிருந்த மக்களின் சந்தேகங்களைப் போக்க விடை அளித்தார். பிறகு அவரது உடலிலிருந்து உயிர் பிரிந்தது.











புத்தரின் போதனைகள் உலகெங்கும் பரவின. அவர் இருந்த இடங்கள் புனிதத் தலங்களாயின. அவரது போதனைகள் இந்தியாவில் மட்டுமல்லாமல் பல நாடுகளிலும் பரவின. அந்த போதனைகளின் அடிப்படையில் பல காவியங்கள், நாடகங்கள், விளக்க உரைகள் எனப் பல நூல்கள் ஆயிரக்கணக்கில் பல மொழிகளில் வெளிவரலாயின. இன்று பௌத்த மதம் உலகிலுள்ள முக்கிய மதங்களில் ஒன்றாகும்.



# கோபத்தை வெல்லா வேந்தன்

நரசிம்மசேனன் என்பவனுக்கு திடீரென்று கோபம் வந்து விடும். அவன் அதனை அடக்க எவ்வளவு முயன்றும் முடியாமல் போயிற்று. கோபம் வந்ததும் கொடியமிருகம் போல நடந்து கொள்ளும் அவன் அந்தக் கோபம் தணிந்ததும் தன் செய்கைக்காக மிகவும் மனம் வருந்துவான்.

ஒரு முறை அவனது சேவகன் ஒருவன் ஏதோ குற்றம் செய்து விட்டான் என்பதற்காக இருபது சவுக்கடிகளை உடனே கொடுக்குமாறு அவன் கட்டளை இட்டான். அந்த சேவகன் சவுக்கடிகள் பட்டு குற்றுயிராகக் கீழே விழுந்தான். வெகு நேரத்திற்குப் பிறகே நரசிம்மசேனனின் கோபம் தணிந்தது. அவன் அந்த வீரனின் உடலில் சவுக்கடிகளால் ஏற்பட்ட தழும்புகளைப் பார்த்து மனம் உருகி அவனுக்கு வைத்தியம் செய்யச் சொன்னான். தன் செய்கைக்காகப் பிறகு மனம் வருந்தினான்.

ராணி அவனது செய்கையைக் கண்டு ''ஆனாலும் இப்படி நீங்கள் கோபப்படக் கூடாது. கோபம் மிகவும் பொல்லாதது. அதனை விட்டு விடுங்கள் அப்படி விடாவிட்டால் இதனால் நாட்டிற்கே ஆபத்து வரக் கூடும்'' என்றாள். அரசனும் தான் கோபத்தை எவ்வளவு அடக்க முயன்றும் முடியாது போவதைக் கூறினான்.

அப்போது அரசி ''நீங்கள் கோபப்பட்டு ஒருவனுக்கு விதித்த தண்டனையை உங்கள் கோபம் தணிந்த பின் நீங்களும் அனுபவியுங்கள். இதனால் உங்களது கோபம் ஒரு வேளை போய் விடலாம்'' என்றாள். அரசனும் ''இது சரி

இரா ஜ ரகுராமன்



யான யோசனைதான். இப்படியே செய்து பார்க்கிறேன்'' என்ருன்.

மறு முறை அரசன் ஒருவன் மீது கோபம் கொண்டு இருபது சவுக் கடிகள் தண்டனையாக விதித்தான். ஆனால் கோபம் தணிந்ததும் அவன் தன் வீரர்களிடம் தன்னை சவுக்கால் இருபது அடிகள் அடிக் கும்படிக் கூறினான். ஆனால் ஒரு வன் கூட அரசனை அடிக்க முன் வரவில்லை.

அப்போது நரசிம்மசேனன் தன் மனைவியிடம் போய் ''நீ கூறியபடி நான் என்னையே தண்டித்துக் கொள்ளலாம் என்ருல் என்னை யாரும் சவுக்கால் அடிக்க முன் வரவில்லையே'' என்ருன்.

ராணியும் ''அப்படியா! இதோ நான் அடிக்கச் சொல்கிறேன்'' எனக் கூறினாள். பிறகு அவள் ஒரு வீரனை அழைத்து ''நீ நான் சொல்லியபடி இப்போது செய்ய வேண்டும். இல்லாவிட்டால் உன் தலையை இப்போதே வெட்டி எறியச் சொல்வேன்'' என்ருள். வீர னும் பயந்து போய் ராணி கூறு வது போலச் செய்வதாகக் கூறினான்.

அவள் ஒரு சவுக்கை எடுத்துக் அவனிடம் கொடுத்து ''இதால் மன்னனை இருபது அடிகள் அடி'' என்ருள். வீரனும் மன்னனைச் சவுக்கால் அடித்தான். முதல் அடி பட்டதுமே மன்னன் துள்ளிக் குதித்து அந்த வீரன் கையிலிருந்த சவுக்கைப் பிடுங்கி அவனை அடித் துத் துரத்தினான். பிறகு தன் மந்திரியை அவன் கூப்பிட்டு ''இந்த ராணி ராஜத்துரோகி. இவளை இப்போதே காட்டில் கொண்டு பொய் விட்டு விடு'' என்ருன். மந்திரியும் உடனே ராணியைக் காட்டில் கொண்டு போய் விட்டுவிட்டு வந்தான்.

அரசனின் கோபம் தணிந்தது. அப்போது தான் செய்த செயலுக் காக அவன் மனம் வருந்தினான். காட்டிற்கு போய் அவன் தன் ராணியை அழைத்துக் கொண்டு அரண்மனைக்கு வந்தான்.

அப்போது ராணி ''உங்கள் கோபத்தைப் போக்க இன்னொரு வழி சொல்கிறேன். நீங்கள் கோபத்தோடு விதிக்கும் தண்டனை களை உடனே அமல் படுத்தக் கூடாது என்று இப்போதே எல்லா அதிகாரிகளுக்கும் அறிவித்து விடுங் கள். உங்கள் கோபம் தணியும் போது உங்களது முந்தைய உத் தரவு நிறைவேற்றப் படாமல் இருக்கும். அதனால் வீணாக யாரும் தண்டனை பெற மாட்டார்கள்'' என்றாள். ஆனால் அதனாலும் பயனில்லை. தான் அளித்த தண் டனை உடனே கொடுக்கப் பட வில்லையே என்று எண்ணி அவனது கோபம் தணியாமல் மேலும் அதிகரிக்கலாயிற்று.

தன் கோபத்தை பற்றி மக்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்று கேட்க நரசிம்மசேனன் மாறு வேடத்தில் பல ஊர்களுக்கு போனான். ஒரு ஊரில் தன்னை விட கோபம் அதிகம் கொள்ளும் ஒரு வனை அவன் பார்த்தான். நரசிம்ம சேனன் அவனைச் சீண்டவே அவன் மன்னனைப் பிடித்து அடித்து உதைக்கப் போனான். அந்த ஊர்க்காரர்கள் மாறு வேடத்திலி ருந்த மன்னனை அவனிடமிருந்து விலக்கி ''கொஞ்சம் பேசாமல் இருங்கள். அவன் ஒரே கோபக் காரன். கோபம் வந்தால் இந்த நாட்டு மன்னனைக் கூட அடித்துப் போட்டு விடுவான். நீங்கள் அமை தியாக இருங்கள்'' என்றார்கள்.



அப்போது நரசிம்மசேனன் தன் வேஷத்தைக் கலைத்து ''நான்தான் இந்நாட்டு மன்னன். எங்கே? என்னை என்ன செய்வானோ பார்க்கலாம்'' என்றான். ஆனால் அந்தக் கோபக்காரனோ ''நீ மன்னனாக இருந்து விட்டால் மட்டும் என் கோபம் போய் விடுமா என்ன? மரியாதையாக என் காலில் விழுந்து மன்னிப்பு கேள். விட்டுவிடுகிறேன்'' என்றான்.

மன்னனுக்குக் கோபம் வந்தது அந்தக் கோபக்காரனுக்கு இருபது சவுக்கடிகள் தண்டனையாக விதித்தான். அந்தக் கோபக்காரனும் ஒவ்வொரு அடியையும் வாங்கிய போதும் மன்னனைத் திட்டலானான். ஊராரும் அந்தக் கோபக்காரனுக்குத் தண்டனை விதித்த மன்னனை மனதிற்குள் திட்டி நொறுக்கினார்கள்.

மன்னனின் கோபம் தணிந்த போது அவன் அந்த சம்பவத்தை ராணியிடம் கூறி ''நம் நாட்டில் என்னை விட அதிகக் கோபப்படுபவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் கடுந்தண்டனை பெற்றாலும் அவற்றை அனுபவித்தவாறே கோபப்பட்டு என்னை திட்டுகிறார்கள். இவர்களைவிட நான் எவ்வளவோ மேல்'' என்றான்.

ராணியோ ''அவர்கள் கோபம் என்றும் கெடுதல் செய்யாது. உங்கள் கோபம் நாட்டிற்கே கெடுதல் விளைவித்து விடும். நீங்கள் ஆட்சி பொறுப்பை என்னிடம் விட்டு விடுங்கள். உங்கள் கோபம் போய் விடும்'' என்றாள். அரசனும் ஆட்சிப் பொறுப்பை உடனேயே அவள் கேட்டபடி ராணியிடம் கொடுத்து விட்டான்.

அதிகாரம் இல்லாத அவனால் கோபப்பட்டும் எதுவும் செய்ய முடியவில்லை. அதனால் அவன் கோபத்தை அடக்கிக் கொள்ள வேண்டியதாயிற்று. நாளடைவில் அவனது கோபகுணம் அவனை விட்டு ஒழிந்தது.



# நல்லது செய்தால்

பொன்னன் தன் நான்கு மகன்களோடு தன் தம்பியின் மகனை சுப்பனையும் சேர்த்து வளர்த்து வந்தான். எல்லோரும் பெரியவர்களாகிக் கல்யாணம் செய்து கொண்டார்கள். சுப்பன் தன் தகப்பனுர் கிராமத்தில் விட்டுப் போன நிலத்தில் விவசாயம் செய்து பிழைக்கலானுன்.

பொன்னன் தன் மகன்களிடம் இருக்க முடியவில்லை. ஏனெனில் அவனது மருமகள்கள் அவனை கவனிக்க முடியாது எனக் கூறி விரட்டி விட்டார்கள். அவன் ஒரு பணக்காரரின் வீட்டில் வேலை செய்து வரலானுன்.

தன் பெரியப்பாவைக் காண வந்த சுப்பன் அவன் வேலை செய்யும் பணக்காரர் வீட்டிற்குப் போனுன். அவன் அந்தப் பணக்காரரிடம் பொன்னன் அப்படி வேலை செய்வது தனக்கு மன வருத்தம் தருகிறது என்றும் அவனைத் தன்னேடு அனுப்பி விடும்படியும் கூறினுன்.

பணக்காரரும் அவனைப் பாராட்டி ''ஆகா! சொந்த மகன்கள் தகப்பனை கைவிட்டாலும் நீ இவனைக் காப்பாற்றுவதாக முன் வந்தது எனக்கு சந்தோஷமாக இருக்கிறது. இவ்வளவு நல்லவனுன உனக்கு என் மகளைக் கல்யாணம் செய்து வைக்கிறேன்'' என்ருர்.

சுப்பனே ''ஐயோ வேண்டாம்! அவள் என் மனதைக் கலைத்து இவரை வீட்டிலிருந்து விரட்டி விட்டால் என்ன செய்வது?'' என்ருன். பணக்காரரோ ''பயப்படாதே. எனக்கு இருப்பது ஒரே மகள். கல்யாணம் ஆனபின் நீயும் பொன்னனும் என் வீட்டிலேயே இருந்து விடலாம்'' என்ருர். சுப்பனும் அவர் மகளைக் கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதித்தான்.





# மயக்கும் தங்கம்

ஒரு வீட்டில் மூன்று பகுதிகள் இருந்தன. முதற்பகுதியில் பக்த சிரோன்மணியான பரந்தாமன் என்பவர் எப்போதும் பஜனை செய்து கொண்டு பக்தர்கள் புடைசூழ இருந்தார். இரண்டாவது பகுதியில் அப்புசாமி என்ற ஆசிரியர் தன் மாணவர்களுக்குப் பாடம்சொல்லிக் கொடுப்பார். அவர்களைக் கூட்டி வைத்துக் கொண்டிருப்பார்.

மூன்றுவது பகுதியில் நாகசாமி என்பவன் இருந்தான். அவனுக்கு வேலை எதுவும் இல்லை. ஆனல் வாரம் ஒரு முறை அவன் மனைவி 'சாமி' ஆடி கேள்விகள் கேட்பவர்களுக்குப் பதில அளிப்பாள். நாகசாமி அப்படி வருபவர்களிடம் ஒரு கேள்விக்கு இரண்டு ரூபாயும், தேங்காய், பழம், ஊதுவத்தி கற்பூரம் முதலியன வசூலித்து வந்தான்.

அந்த மூன்று வீட்டுக்காரர்களுக்கு குடி தண்ணீர் கொண்டு வர சின்னசாமி என்பவன் அமர்த்தப் பட்டான். அவன் தனிக் கட்டை. அந்த மூன்று வீடுகளிலும் பாத்திரம் தேய்த்து வீடு பெருக்க சிவகாமி என்பவள் வேலை செய்து வந்தாள்.

ஒரு சனிக்கிழமை காலை சிவகாமி நாகசாமி. வீட்டுப் பாத்திரங்களைத் தேய்த்து வைத்தாள். அப்போது முன் தினம் வெள்ளிக்கிழமையன்று நாகசாமியின் மனைவி 'சாமி' ஆடிய போது வந்த பழங்களும் தேங்காய் மூடிகளும் குவியல்களாக இருப்பதைக் கண்டாள். அவள் நாகசாமியிடம் ''சாமி, என் தகப்பன் படுத்த படுக்கையாகக்

பாபநாசம் சாமா

கிடக்கிறார். இரண்டு பழங்கள் கொடுங்களேன்'' என்று கேட்டாள். அதைக் கேட்ட நாகசாமி சட்டென ஒரு துணியை எடுத்துப் பழக் குவியல்மீதுபோர்த்தி ''நீ கண் போட்டு விட்டாயா? இன்று இவை விலை போகுமோ என்னவோ'' என்றான். அவனது மனைவியோ ''உனக்கு சம்பளம் கொடுப்பது போதாதா? பழம் வேறு கொடுக்க வேண்டுமா? ஆனாலும் இப்படிப் பேராசைப் படக்கூடாது'' என்றாள் சிவகாமியைப் பார்த்து. இந்த உத்தமிதான் அதற்கு முந்தைய நாள் இரவு ஒருவரிடம் ''நீ ஆசைப்பட்டே கெட்டாய். கண்டதெற்கெல்லாம் ஆசைப்படாதே' என்று கூறியது சிவகாமிக்கு நினைவிற்கு வந்தது.

இதே சமயம் சின்னசாமி ஆசிரியர் அப்புசாமியின் வீட்டில் இருந்தான். அவரிடம் சிறுவர்களுக்கான பாடப் புத்தகங்கள் இருப்பதைக் கண்டு தன் வீட்டருகே உள்ள ஒரு ஏழைச் சிறுவனுக்கு அவரிடமிருந்து இரண்டு புத்தகங்கள் வாங்கி அந்தச் சிறுவனுக்குக் கொடுக்கலாம் என நினைத்து கேட்கவே அவரோ ''ஏய்! இப்படி ஓசி வாங்க ஆசைப் படக் கூடாது அவனைப் ஏதாவது கூலி வேலை செய்து பழகச் சொல்.



இதையெல்லாம் நான் பாதி விலைக்கு விற்கிறேன். தெரியுமா?" என்றார். அது கேட்டுச் சின்னசாமி திகைத்து வெளியே வந்தான்.

அப்போது தன் எதிரே வந்த சிவகாமியைப் பார்த்து அவன் ஆசிரியர் கூறியதைச் சொன்னான். சிவகாமியும் நாகசாமியின் வீட்டில் நடந்ததைக் கூறினாள். அப்போது சின்னசாமி ''சரி சரி நான் நாளை அடுத்த ஊரில். நடக்கும் உற்சவத்திற்குப் போகப் போகிறேன்.'' என்றான். சிவகாமியும் ''எனக்கும் போக ஆசைதான். ஆனால் இந்த வீட்டு வேலைகளை எல்லாம் செய்ய வேண்டுமே.'' என்றாள்.



சின்னசாமியும் ''வேலைகளைச் சீக்கிரம் செய்து விட்டுப் போகலாம். முதலில் பரந்தாமனிடம் சொல்லலாம். அவர்தான் சாமி பக்தராயிற்றே. போகச் சொல்வார்'' என்றான். இருவரும் பரந்தாமனின் வீட்டிற்குப் போய் மறுநாள் உற்சவத்திற்குப் போக அனுமதிக்குமாறு வேண்டினார்கள்.

அவரோ ''இந்த தேர் திருவிழா என்றெல்லாம் ஆசைப் படாதீர்கள். எல்லாம் பகவானை இங்கேயே நினைத்தால் போதும். உற்சவத்திற்கு நாளை அடுத்த ஊருக்குப் போக வேண்டாம். அப்படி மீறிப் போனால் உங்களுக்கு ஒரு நாள் சம்பளம் கிடைக்காது'' என்றார். அது கேட்டு இருவரும் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு வெளியே வந்தார்கள்.

அப்போது சிவகாமி ''இந்தப் பெரிய மனிதர்கள் சொல்வது ஒன்று. செய்வதோ அதற்கு நேர் மாறானது'' என்று கோபத்தோடு கூறினாள்.

மறுநாள் தண்ணீர் எடுத்து வந்த சின்னசாமி அந்த வீட்டு வாசலில் பளிச்சென மின்னும் ஒரு மோதிரத்தைக் கண்டெடுத்தான். அவன் அதை சிவகாமியிடம் காட்டி ''பார்த்தாயா தங்க மோதிரம்! இதை நான் கண்டெடுத்தேன்'' என்றான். அப்போது அங்கு வந்த நாகசாமி 'தங்க மோதிரம், கண்டெடுத்தேன்' என சின்னசாமி கூறியது கேட்டு ''ஏய்! அது என் மோதிரம். 'சாமி' யிடம்கேள்வி கேட்க வந்தவன் கொடுத்தது'' என்றான்.

அதைப் பார்த்துக் கொண்டிருந்த அப்புசாமி ஓடி வந்து ''இல்லை இல்லை இதை நேற்று என் மாணவனின் தந்தை எனக்கு குரு தட்சணையாகக் கொடுத்துப் போனார். அதைத் தான் நான் இவ்வளவு நேரம் தேடிக் கொண்டிருந்தேன். அதை இப்படிக் கொடு'' என்றார்.

அப்போது பக்த சிரோன்மணி பரந்தாமர் பாய்ந்து வந்து ''இது நேற்று பஜனையின்போது எனக்கு அளித்த காணிக்கை. மரியாதையாக என்னிடம் கொடுத்து விடுங்கள் இல்லாவிட்டால் உங்களுக்கு நரக வாசம் தான் கிடைக்கும்'' என்றார்.

இதற்குள் ஒரு பெரிய கூட்டமே கூடி விட்டது. அப்போது சிவகாமி சட்டென சின்னசாமியின் கையிலிருந்த மோதிரத்தை வாங்கிக் கொண்டு ''இந்த மோதிரம் சின்னசாமிக்கு நேற்றிரவு கள்ளுக்கடையில் கிடைத்தது.. உங்கள் மூவரில் யார் நேற்றிரவு கள்ளுக் கடைக்குப் போய்அங்கு இதனைத் தொலைத்தார்களோ அவர் வந்து வாங்கிக் கொள்ளலாம்'' என்றாள்.

அது கேட்டு பரந்தாமன் ''இது என் மோதிரம் இல்லை'' என்றார். அப்புசாமியோ ''என் மோதிரம் பச்சைக்கல் மோதிரம். இதுவல்ல" என்றார். நாகசாமியும் ''என் மோதிரம் நெளி மோதிரம்'' என்றான். அவர்கள் ஒரு நிமிடமும் நிற்காமல் தம் பகுதிகளுக்குப் போய் விட்டார்கள். கூட்டமும் கலைந்து போய் விட்டது.

அவர்கள் போனதும் சிவகாமியும் சின்னசாமியும் மட்டுமே இருந்தனர். அப்போது சின்னசாமி ''சிவகாமி! இப்படி ஏன் ஒரு பொய் சொன்னாய்? இது கள்ளுக் கடையில் கிடைக்கவில்லையே.

இங்கே தானே கிடைத்தது'' என் கேட்டான் ஆச்சரியப்பட்டவாறே

சிவகாமியும் ''உனக்கு ஒன் றுமே தெரியவில்லே போ! இந்த மோதிரம் அவர்களில் யாருடைய தும் இல்லே என்பதை உறுதி செய்து கொள்ளவே அப்படிச் சொன்னேன். தங்க மோதிரம் கண்டு எடுக்கப்பட்டது என்றதும் இவர்கள் அதைத் தம்முடையது என்று கூறிக் கொண்டு ஓடி வந் தார்கள். ஆனுல் அது கிடைத்த இடம் கள்ளுக் கடை என்றதும் ஓடி விட்டார்கள்! இந்த மோதி ரத்தை யாராவது பெறவேண் டும் என்ருல் தான் முன்தினம் கள் ளுக் கடைக்குப் போனதாகக் கூறி யாக வேண்டும். அப்படிச் சொன் னுல் இவர்களேத் தேடிக் கொண்டு பக்தர்களோ, மாணவர்களோ, சீடர்களோ வர மாட்டார்கள். இப்படி சுயநலம் கொண்டவர்கள் தாம் பிறருக்கு அறிவுரைசொல்ல முன் வருகிருர்கள்! என்ன வேஷ தாரிகள் இவர்கள் பார்த்தாயா? இந்த மோதிரம் யாருடையதுஎன் பது உறுதியாகத் தெரிந்த பின் அவருக்கு கொடு'' எனக் கூறி மோதிரத்தைச் சின்னசாமியிடமே திருப்பிக் கொடுத்தாள்.

சின்னச்சாமியும் ''ஆமாம்! இதெல்லாம் என் மூளேயில்படவே இல்லே. உன் மாதிரி யாராவது எனக்குத் துணே இருந்தால்தான் புரிகிறது. ஏன் சிவகாமி! நீ என்னேக் கல்யாணம் செய்து கொண்டு விடு. நாம் இருந்து சுகமாக வாழலாம்'' என்ருன்.

சிவகாமியும் வெட்கப்பட்ட வாறே ''எனக்கு இஷ்டமே. என் தந்தையையும் ஒரு வார்த்தை கேட்கிறேன். ஆமாம். அந்த மோதிரம் தங்கந்தாஞ?'' என்று சந்தேகப்பட்டவாறே கேட்டாள்.

சின்னச்சாமியும் 'தங்கமோ' பித்தளேயோ, அது தான் தங்க மான உன்னே என்னிடம் சேர்த்து விட்டது'' என்ருன்.






ஜானம்மாவிற்கு நகைகள் என்றால் ஒரே பைத்தியம். அவள் நிறைய நகைகளை அணிந்து கொள்வாள். யாராவது இரவல் கேட்டாலும் கொடுக்க மாட்டாள்.

ஒரு முறை அவள் தன் அண்ணன் மகளின் கல்யாணத்திற்குப் போக வேண்டி வந்தது. அவளது அண்ணன் நஞ்சப்பன் பணக்காரனே. தாராள மனம் படைத்தவன்.

கல்யாண முகூர்த்த வேளை நெருங்கியது. அப்போது நஞ்சப்பன் தன் தங்கை ஜானம்மாவைத் தனியாக அழைத்துப் போய் ''ஜானம்மா. இப்போது நீ ஒரு சின்ன உபகாரம் செய்ய வேண்டும். நான் அடுத்த ஊர் பொற்கொல்லனிடம் என் பெண்ணிற்கு வேண்டிய தங்க நகைகளைச் செய்யக் கொடுத்திருந்தேன். ஆனால் அவன் இது வரை வந்த பாடில்லை. முகூர்த்த வேளை வந்து விட்டது. மணப் பெண்ணை நகைகள் இல்லாமல் மணப் பந்தலில் உட்கார வைப்பது சரியல்ல. நீ உன் நகைகளை அவளுக்குப் போட்டு வை. அவள் கழுத்தில் மணமகன் தாலி கட்டியதும் உன் நகைகளை நீ வாங்கிக் கொள்ளலாம் ''என்றான்'

அதைக் கேட்ட ஜானம்மா திடுக்கிட்டாள். தன் நகைகளைக் கொடுக்க மனம் இல்லாமல் என்ன சாக்கு சொல்லலாம் என யோசித்த அவள் சட்டென ''அண்ணா! நான் போட்டுக் கொண்டிருக்கும் நகைகள் எல்லாம் அசல் தங்க நகைகளல்ல. தங்க முலாம் பூசிய போலி நகைகள். போலி நகைகளைப் போட்டா மணமகளுக்குக் கல்யாணம் செய்

சௌரி சுவாமிநாதன்

வது? என் நகைகளைப் போட வேண்டாம்'' எனக் கூறினுள்.

நஞ்சப்பனும் தன் தங்கை கூறியதை உண்மை என நம்பினுன். இனி என்ன செய்யலாம் என அவன் யோசித்துக் கொண்டிருக்கும் போதே நல்ல வேளையாகப் பொற் கொல்லன் தங்க நகைகளைக் கொண்டு வந்து அவனிடம் கொடுத்தான். கல்யாணமும் நடைபெற்றது.

கல்யாணத்திற்கு வந்தவர்களெல்லாம் அன்றிரவு நஞ்சப்பன் வீட்டிலேயே தங்கினுர்கள். ஜானம்மாவும் வேறு இரு பெண்களும் சற்று ஒதுப்புறமான அறைக்குள் படுத்துக் கொண்டார்கள்.

நள்ளிரவில் சில திருடர்கள் அந்த அறைக்குள் நுழைந்து கத்தியைக் காட்டி மூன்றுபெண்களையும் மிரட்டி அவர்கள்போட்டிருந்த நகைகளை எல்லாம் கழற்றிக் கொடுக்கும்படி செய்து அவற்றை எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள்.

திருடர்கள் போனபின் அந்த மூன்று பெண்களும் ஓவெனக் கத்தினுர்கள். அந்த அழுகைக் குரல் கேட்டு எல்லோரும் எழுந்து வந்து என்ன விஷயம் என்று கேட்க அவர்களும் தம் நகைகளை திருடர்கள் கொண்டு போனதைக் கூறினுர்கள்.

அப்போது நஞ்சப்பன் ''ஜானம்மா, உன் நகைகள்தான் முலாம் பூசிய நகைகளாயிற்றே. அது ஒன்றும் அதிக விலை பெருதே. மற்றவர்களின் நகைகளும் உன் நகைகளைப் போல இருந்தால் திருடர்களுக்குப் பெரிய ஏமாற்றமேதான் ஏற்படும்'' என்ருன்.

இதைக் கேட்ட ஜானம்மாவிற்கு என்ன சொல்வதுஎன்றே தெரியவில்லை. தன் பொய் தனக்கே கேடு விளைவித்தது கண்டு கற்சிலையாக நின்ருள்!






அரிச்சந்திரன் நரபலி கொடுக்காமல் யாகத்தை முடித்தது விசுவாமித்திரரின் அருளே என யாவரும் எண்ணி மகிழ்ந்தார்கள். அப்போது வசிஷ்டரும் விசுவாமித்திரரும் இந்திரனைக் காண தேவ சபைக்குச் சென்ருர்கள். வசிஷ்டரின் மீது பல விதப் பதக்கங்களும் பரிசுப் பொருள்களும் இருப்பது கண்டு விசுவாமித்திரர் ''உங்களை இப்படி கௌரவித்தது யார்?'' என்று கேட்டார்.

வசிஷ்டர் பெருமை பொங்க ''அரிச்சந்திரன் என் சீடன் தானே! தானே! அவனுக்குச் சமமான மன்னன் இருக்கிறுன்? அவன் ராஜசூய யாகம் செய்து எனக்கு நிறைய தட்சணை கொடுத்து கௌரவித்தான். உண்மை பேசுவதிலும், கொடையிலும் வீரத்திலும் நேர்மை தவருமல் நடப்பதிலும் ஈரேழு பதினான்கு உலகிலும் அவனுக்கு இணையாக யாருமே இல்லை'' என்று புகழ்ந்தார்.

இப்படி அரிச்சந்திரனை வானுயரப் புகழ்வது கண்டு விசுவாமித்திரர் ''பொய் சொல்லி ஏமாற்றுபவனை ஏன் இப்படிப் புகழ்கிறீர்கள்? இவன் வருணனை ஏமாற்றவில்லையா? இவன்பொய் பேசுபவன். கொடையாளி அல்ல. இதை நான் நிரூபிக்கிறேன். அப்படி நிரூபிக்கா விட்டால் தவத்தால் நான் சம்பாதித்த புண்

விசுவாமித்திரர் முயற்சி



ணியம் முழுவதையும் நான் இழக்கத் தயார். வசிஷ்டர் தம் சீடனுக்காக இப்படிப் பந்தயம் போடத் தயாரா? ''என்று கேட்டார்.

வசிஷ்டரும் ''ஓ! அரிச்சந்திரன் நேர்மையானவன் சொன்ன சொல் தவருதவன். உண்மையே பேசுபவன். அவன் பொய் பேசு பவன் என்று நீங்கள் மட்டும் நிரூ பித்தால் என் தவத்தையே நான் இழக்கத் தயார்'' என்ருர். தாம் நிரூபிப்பதாகக் கூறி விசுவாமித் திரர் கிளம்பவே வசிஷ்டரும் தம் இருப்பிடத்திற்கு வந்தார்.

ஒரு முறை அரிச்சந்திரன் காட்டிற்குச் சென்ற போது அங்கு பெண் ஒருத்தியைக் கண் டான். அவள் அழுது கொண் டிருப்பது கண்டு அவன் ''நீ யாரம்மா? இந்த காட்டில் ஏன் இப்படி அழுகிருய்?'' என்று கேட்டான் அவளும் ''விசுவா மித்திரர் என்ற முனிவர் என்னை அடையத் தவம் செய்து என்னைத் துன்புறுத்துகிருர்'' என்ருள்.

அரிச்சந்தினும் ''நீ கவலைப் படாதே. அவரது தவம் நின்று போகும்படி செய்கிறேன்'' எனக் கூறி விசுவாமித்திரரின் ஆசிரமத்திற்குப் போனுன். அவன் ''சுவாமி. நீங்கள் ஏன் இப்படித் தவம் செய்து உங்கள் உடலை வருத்திக் கொள்கிறீர்கள்? என் ஆட்சியில் பிறரைத் துன்புறுத்தும் நோக்கத்தோடு யாரும் தவம் செய்யக் கூடாது. இதை நான் அனுமதிக்க மாட்டேன். உடனே இந்தத் தவத்தை நிறுத்துங்கள்'' என்ருன்.

விசுவாமித்திரர் உடனே அங்கே இருந்து கிளம்பிப் போய் விட்டார். அவருக்கு அரிச்சந் திரன் மீது கோபம் ஏற்பட்டது. அவர் அரிச்சந்திரனை எப்படி யாவது சிக்க வைக்க வேண்டும் என எண்ணி ஒரு ராட்சஸனைப் பன்றியாக்கி அனுப்பினுர். அது அரிச்சந்திரனின் நந்தவனத்தில் புகுந்து அங்குள்ளவர்களை எல்

லாம் பயமுறுத்திப் பூச் செடிகளை யும் நாசப் படுத்தியது. அங் குள்ளவர்களால் அதனை அடக்க முடியாமல் போகவே அவர்கள் அரிச்சந்திரனிடம் போய்க் கூறி னார்கள்.

அரிச்சந்திரன் குதிரைமீது அமர்ந்து சில வீரர்களுடன் தன் நந்தவனத்திற்கு வந்தான். தன் நந்தவனம் பாழடைந்து கிடப்ப தையும் உறுமிக் கொண்டு நிற்கும் பன்றியையும் கண்டு அவன் கோபம் கொண்டான். அதன் மீது அம்புகளை எய்தான். அப்போ தும் அது சாகாமல் மறைந்து மறைந்து மீண்டும் மீண்டும் தோன்றுவதைக் கண்டான். அவன் அதனைத் துரத்தவே அது அவனை ஒரு காட்டிற்குள் கொண்டு போயிற்று.

காட்டில் பன்றி அவனை அங் கும் இங்கும் அலைய வைத்தது. அது அங்கே திடீரென அவன் கண்களுக்குத் தென்படாமல் மறைந்தும் போயிற்று. அரிச்சந் திரன் பன்றியைக் காணாமல் தாகம் எடுத்ததால் அருகில் ஓடிய ஆற் றில் தன் குதிரையையும் தண்ணீர் குடிக்க வைத்துத் தானும் குடித் தான்.

அப்போது விசுவாமித்திரர் ஒரு கிழப்பிராம்மணன் வடிவில் அவன் முன் வந்தார். அரிச்சந்திரன்



அவரை வணங்கவே அவரும் அவனை ஆசீர்வதித்து ''அரசனான நீ தனியாக இப்படிக் காட்டிற்கு வரலாமா?'' என்று கேட்டார்.

அரிச்சந்திரன் அந்தக் கிழவரி டம் தான் துரத்தி வந்த பன்றி யைப் பற்றிக் கூறி ''நான் வழி தவறி விட்டேன். இப்போது தலை நகருக்குப் போகும் வழி சொல் லுங்கள்'' என்றான். அப்போது அவர் ''இது புண்ணிய நதி. இதில் நீராடி உன்பித்ரு தேவதை களுக்குத் தர்ப்பணம் செய். பிறகு உன் ச்க்திக்குத் தக்கபடி தானம் செய். எனக்கு நீ இப் படி தானம் செய்தால் உனக்குத் தலைநகருக்குப் போகும் வழியைக்



காட்டுகிறேன்'' என்ருர். அரிச்சந்திரனும் ''சுவாமி. நீங்கள் எதைக் கேட்டாலும் நான் தானமாகக் கொடுக்கிறேன். என்ன வேண்டும்? நான் இது வரை எவ்வளவோ தானங்களைச் செய்திருக்கிறேன்'' என்ருன்.

பிராம்மணரும் ''ஆமாம். நீ எதைக்கேட்டாலும் கொடுப்பாய் என்று எனக்குத் தெரியும். சூரிய வம்சத்து மன்னனுயிற்றே நீ! நீ பொய் பேசவே மாட்டார்ய் என வசிஷ்டர் கூற நான் கேட்டிருக்கிறேன். அதனுல் நீ என் மகனின் கல்யாணத்தை நடத்திக் கொடு போதும்'' என்ருர். விசுவாமித்திரர் தன் மாயா வித்தையால் ஒரு பத்து சிறுமியையும் ஒரு வாலிபனையும் சிருஷ்டித்தார். பிறகு ''இவர்களின் திருமணம் தான் நடக்க வேண்டும். இதைச் செய்து முடித்தால் ராஜசூய யாகம் செய்ததை விட அதிகம் பலன் உனக்குக் கிடைக்கும்'' என்ருர்.

அரிச்சந்திரனும் அவர்களது திருமணத்தை நடத்தி தருவதாகக் கூறி அந்தக் கிழவர் காட்டிய வழியில் போய்த் தன் தலை நகரை அடைந்தான்.

அப்போது விசுவாமித்திரர் அந்த இருவருக்கும் கல்யாணத்தை நடத்தி விட்டு, கிழப் பிராம்மணன் உருவில் தலைநகருக்குப் போய் அரிச்சந்திரனைக் கண்டு ''நீ எனக்குக் கொடுத்த வாக்குப்படி தானம் செய்'' என்ருர்.

அரிச்சந்திரனும் ''நீங்கள் எதைக் கேட்டாலும் கொடுப்பதாகக் கூறினேனே. கேளுங்கள்'' என்ருன். கிழவரும் ''உன் நாடு முழுவதையும் யானை குதிரை முதலியவற்ருேடும் மற்றுமுள்ள எல்லாச் செல்வங்களோடும் எனக்குக் கொடு'' என்ருர்.

அரிச்சந்திரனும் சற்றும் தயங்காமல் ''ஆகா! உங்களுக்கு கொடுத்து விட்டேன்'' என்ருன். அப்போது விசுவாமித்திரர் ''தானம் செய்வது தட்சிணையோடு செய்யவேண்டும். எனவே

இந்த தானத்திற்கான தட்சிணை கொடு'' என்றார்.

அரிச்சந்திரனும் எவ்வளவு தட்சணை வைக்கவேண்டும்'' என்று கேட்டபோது விசுவாமித்திரர் ''இரண்டு பாரம் தங்கக் கட்டிகள்'' என்றார். அரிச்சந்திரனும் ''ஓ! கொடுக்கிறேனே'' என்றான். ஒரு கிழப் பிராம்மணர் இப்படி ஏமாற்றுவது கண்டு அரிச்சந்திரன் ஆச்சரியம் அடைந்தான். எல்லாவற்றையும் தானம் கொடுத்த பின் அவருக்கு மேலும் தட்சணையாகக் கொடுக்க இரண்டு பாரம் தங்கத்திற்கு அவன் என்ன வழி செய்வான்?



அப்போது அரிச்சந்திரனின் மனைவி அவனது கவலையின் காரணத்தைக் கேட்டு அறிந்தாள். அன்றிரவு அரிச்சந்திரன் சாப்பிடவில்லை. மறுநாளோ விசுவாமித்திரர் வந்து ''இந்த நாடு என்னுடையது. நீ வேறு எங்காவது போய் விடு. ஆனால் என் தட்சிணையை மட்டும் சீக்கிரத்திலேயே கொடுத்து விடு'' என்றார்.

அரிச்சந்திரனும் அவ்வாறே செய்வதாகக் கூறி தட்சிணை கொடுக்கத் தவணை கேட்டுத் தன் மனைவியையும் மகனையும் அழைத்துக் கொண்டு கிளம்பினான். மூவரும் உடுத்திய உடையுடன் அரண்மனையை விட்டுச் சென்றார்கள். மக்களோ மன்னன் ஏமாற்றப்பட்டது கண்டு விசுவாமித்திரரைத் திட்டி நொறுக்கினார்கள்.

அரிச்சந்திரன் கிளம்பிச்சென்றபோது விசுவாமித்திரர் ''என் தட்சிணையை இப்போதே கொடு. அப்படிக் கொடுக்க இஷ்டம் இல்லாவிட்டால் கொடுக்க முடியாது என்று கூறிவிடு. நான் மறுபடியும் கேட்கமாட்டேன். வேண்டுமானால் உன் நாட்டையே திருப்பியும் கொடுத்து விடுகிறேன். சொன்ன சொல்லை நிறைவேற்று. இல்லாவிட்டால் முடியாது என்று கூறி விடு'' என்றார்.

அரிச்சந்திரனோ ''சுவாமி! உங்களுக்குக் கொடுப்பதாகக் கூறிய



தைக் கொடுத்தே தீர்வேன். நான் வார்த்தை தவறியவன் என்ற பெயர் வாங்க மாட்டேன். அப்படிச் செய்தால் என்னைப் பார்த்து எல்லோரும் பரிகசிப்பார்கள். கொஞ்சம் பொறுத்துக் கொள்ளுங்கள். உங்கள் தட்சணையைச் செலுத்தி விடுகிறேன்'' என்றான்.

அது கேட்டு விசுவாமித்திரர் ''இதென்ன அர்த்தமற்ற பேச்சு? உனக்கு எங்கே இருந்து பணம் கிடைக்கப் போகிறது? எல்லாவற்றையும் தான் எனக்கு தானம் கொடுத்து விட்டாயே. உன்னால் முடியாது என்று சொல்லி விடு. நீ இந்தச் சிக்கலில் இருந்து எளிதாக விடுபட்டு விடலாம். நானும் உன்னைத் தொந்தரவு செய்ய மாட்டேன்'' என்றார்.

அரிசந்திரனோ ''சுவாமி! நான் சொன்ன சொல்லை இல்லை என்று கூறவே மாட்டேன். என் உடலை விற்றாவது ஒரு மாதகாலத்துள் உங்கள் தட்சிணையைக் கொடுக்கிறேன், என் மனைவியும் மகனும் கூட திடகாத்திரர்களாக இருக்கிறார்கள். எங்களை விலைக்கு வாங்குபவர்கள் இந்த அயோத்தியில் இருந்தால் சரி. இல்லாவிட்டால் நான் இவர்களை அழைத்துக் கொண்டு காசிக்குப் போய் அங்கு எங்களை விற்று உங்கள் தட்சணையைக் கொடுக்கிறேன்'' என்றான்.

பின்னர் அரிச்சந்திரன் காசிக்கு சென்றான். விசுவாமித்திரர் பிராம்மணன் உருவிலே அவனோடு சென்றார். அரிச்சந்திரன் கங்கையில் நீராடித் தர்ப்பணம் செய்தான். பிறகு விசுவாமித்திரரிடம் அவன் ''எங்களில் யாரையாவது ஒருவரை விற்று உங்கள் தட்சணையை நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்றான்.

அவரோ ''ஒரு மாத காலம் உன்னோடு திரிந்தேன். நீ எப்படியாவது என் தட்சணையைக் கொடுத்து விட்டுப் போ'' என்றார். அரிச்சந்திரனும் ''இன்னும் ஒரு மாதம் முடியவில்லையே.

இன்று சாயந்திரத்திற்குள் எப்படி யாவது கொடுத்து விடுகிறேன்'' என்ருன்.

விசுவாமித்திரரும் ''சரி, இன் றைக்குள் நீ கொடுக்கா விட்டால் உன்னைச் சபித்து விடுவேன்'' என்று மிரட்டி விட்டுப் போனுர். அரிச்சந்திரனும் அன்று மாலைக் குள் எப்படி இரண்டு பாரம் தங் கம் சம்பாதிப்பது என யோசிக்க லானுன். பல விதமாக எண்ண மிட்டு முதலில் தன்னையே யாருக் காவது விற்றுப் பணம் பெறுவது என அவன் தீர்மானித்துக்கொண் டான்.

அரிச்சந்திரன் கவலைப்படுவ தைக் கண்டு அவனது மனைவி ''என்ன ஆனுலும் சரி, சொன்ன சொல்லை நிறைவேற்றுவது ஒரு அரசனின் கடமை. யயாதி நூறு அசுவமேதயாகங்களைச் செய்தார். இவற்றின் பலனுக சொர்க்கத்திற் குச் சென்ருர். ஆனுல் அங்குஒரு பொய் சொன்னதற்காக அதோ கதியை அடைந்தார் என்பது தெரிந்தது தானே'' என்ருள்.

அதைக் கேட்ட அரிச்சந்திர னும் ''நீ ஏதோ என்னிடம் சொல்ல விரும்புவது போலத் தெரிகிறது. தயக்கமில்லாமல் சொல். கேட்கிறேன்'' என்ருன். அவன் மனைவியும் ''மனைவி என்ப வள் புத்திரப் பேறு அளிப்பவள். என்னுல் உங்களுக்கு ஒரு மகன் கிடைத்தாகி விட்டது. எனவே இனிமேல் நான் ஏன் இருக்க வேண்டும்? என் கடமை தீர்ந்து விட்டது. அதனுல் என்னை யாருக் காவது நீங்கள் விற்று விடுங்கள். அந்த பிராம்மணனுக்கு தட்சணை யைக் கொடுத்து விடலாம் உங்கள் வாக்கையும் காப்பாற்றிக் கொள்ளலாம்'' என்ருள்.

இது கேட்டு அரிச்சந்திரனின் மனம் வாடியது. தன் மனைவி இவ்வாறு கூறுகிருளே என எண்ணி அவன் தன் நினைவையே இழந்து கீழே விழுந்தான்.





# அவள் செய்தது!

வெகு காலத்திற்கு முன் கெய்ரோ நகரில் அல் நாஜர் என்ற நகை வியாபாரி இருந்தான். அவன் மிகவும் நல்லவன் என்றும் பெண்களை ஏறெடுத்தும் பார்க்க மாட்டான் என்றும் பெயர் பெற்றவன்.

ஒரு நாள் அவன் கடைக்கு ஒரு நீக்ரோ அடிமைப் பெண் வந்து ஒரு லிகிதத்தைக் கொடுத்தாள். அவன் அது என்ன எனக் கேட்கவே அவளும் ''இதைப் படித்து விட்டு பதில் கொடுங்கள்" என்றாள்.

அல்நாஜர் அதைப் பிரித்துப் படித்தான். அதில் ஒரு காதல் கவிதை எழுதப்பட்டிருந்தது. அதைப் படித்ததும் அவன் முகம் சிவந்தது. அந்த லிகிதத்தை சுக்கு நூறாகக் கிழித்துப் போட்டு ''இந்தக் கடிதத்தை உன் எஜமானி தான் கொடுத்தாள் என்றால் நீ ஏன் கொண்டு வந்தாய்? என்னைப் பற்றி ஊரே அறியுமே. என் முன் நில்லாதே. போ. போ'' என்று விரட்டி விட்டான். இந்த சம்பவத்தைப் பற்றிக் கேட்டவர்களெல்லாம் அல்நாஜரைப் புகழ்ந்தார்கள்.

நான்கைந்து வருடங்கள் கழிந்தன. அப்போது அல்நாஜர் மனதில் யாராவது நல்ல பெண்ணை மணந்து கொண்டு குடித்தனம் நடத்த வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது.

ஒரு நாள் ஐந்தாறு அடிமைப் பெண்களோடு அழகிய பெண் ஒருத்தி அவனது நகைக்கடைக்கு வந்தாள். அவள் தனக்குச் சரியாக இருக்கும் கால் கொலுசு இருக்கிறதா எனக் கேட்டாள். அல்நாஜரும் ''ஏன் இல்லாமல்? பல அளவுகளில் நாங்கள் நகைகளைச்

கே. வெங்கடாசலம்



செய்து வைத்திருக்கிறோம்'' எனக் கூறினான். அவளும் ஓரிடத்தில் உட்கார்ந்து தன் கால்களைக் காட்டவே அவ்வளவு சிறிய கால்களைப் பார்த்து விட்டு அல் நாஜர் திகைத்துப் போய் ''ஆகா! இவ்வளவு அழகான சிறிய பாதங்களை நான் பார்த்ததே இல்லை. என் கடையிலுள்ள எந்த கொலுசும் இந்த கால்களுக்குப் பெரிதாகத்தான் இருக்கும்'' என்றான்.

அப்போது அவள் ''கால் கொலுசு இல்லாவிட்டால் போகிறது, என் கைகளுக்குச் சரியாக உள்ள வளையல்களாவது இருக்குமா?'' என்று கூறித் தன் கைகளை நீட்டிக் காட்டினாள். அவளது கைகளைப் பார்த்து விட்டு அல் நாஜர் ''இந்தக் கைகளும் அழகான சிறிய கைகளே. இவற்றிற்கு அணிவிக்க சிறிய வளையல்களாக இராதே'' என்றான்.

உடனே அவள் ''என்ன இது? என் கையைப் பார்த்து கரலாக் கட்டை என்று சொல்கிறீர்களா?" என்று கேட்டாள். அல் நாஜரும் ''ஐயோ! இப்படிப்பட்ட அழகான சிறிய கைகளைப் பார்த்து கர்லாக் கட்டை என்றால் என் நாக்கு அழுகிப் போய் விடும். இவ்வளவு அழகிய கைகளையும் கால்களையும் உடைய பெண்ணை நான் பார்த்ததே இல்லை. ஒரு விஷயம் கேட்டால் கோபித்துக் கொள்ள மாட்டாயே. என்னை மணந்து கொள்ள முடியுமா?'' என்று கெஞ்சிக் கேட்டான்.

அப்பெண்ணும் புன்னகை புரிந்தவாறே ''என் தந்தைக்கு என் மீது மிகவும் எரிச்சல். என் தலை தேங்காய் நார் போலவும், விகாரமான முகமும், நீண்ட கோரமான பல் வரிசையும் எனக்கு உள்ளது என்று அவர் அடிக்கடி இடித்துக் கூறுகிறார். முகத்தில் அம்மைப் புள்ளிகள் நிறைந்த என்னை யாருமே கல்யாணம் செய்து கொள்ளமாட்டார்கள் என்று கூறுகிறார். நீங்கள் அவரிடம் போய் நான் மிகமிக அழகாக

இருக்கிறேன். என்று சொன்னல் நானும் மகிழ்வேன். நம் கல்யாண மும் நடக்கும்'' என்ருள்.

அல்நாஜரும் ''உன்னைப் பார்த்தா உன் தந்தை இப்படி எல்லாம் சொன்னர்? சரி. நான் போய் அவரைப் பார்த்துப் பேசு கிறேன். உன் முகவரியைக் கொடு'' என்ருன். அவளும் ''என் தந்தை ஷேக் அல் இஸ்லாம் அவர் வியாபார வட்டத்தில் பெரிய புள்ளி. நீங்கள் என்னை மணப்பதாக அவரிடம் சொன்னல் அவர் லேசில் ஒப்புக் கொள்ள மாட்டார். அவர் என்ன சொன்னலும் நீங்கள் ஏற்காமல் அவரது மகளை உங்களுக்குப் பிடித்திருப்ப தாகவே சொல்லி விடுங்கள்'' என்று சொல்லி விட்டுப் போனள்.

அல்நாஜரும் அன்றே ஷேக் அல் இஸ்லாமைக் கண்டு அவரது மகள் தனக்குப் பிடித்துப் போயிருப்ப தாயும் அவளை மணக்க விரும்புவ தாயும் கூறினன். இஸ்லாமும் "நீ என் மகளைச் சரியாகப் பார்த் தாயா? அவள் விகாரமான முகம் உடையவள். நீண்ட பல், முகத் தில் ஒரே அம்மைந் தழும்பு. தேங் காய் நார் போலத் தலை மயிர்'' என்ருர்.

அல்நாஜரோ ''பரவாயில்லை. எனக்கு அவளைப் பிடித்துப் போயிற்று. நான் மணந்து கொள் கிறேன்'' என்ருன். அப்போது இஸ்லாம் ''இதோ பார். மணந்து கொண்டு விட்டு நீ அப்புறம்





அவள் அழகாயில்லை என்று விவாக ரத்து செய்யக் கூடாது. அப்படிச் சொல்வதானால் எனக்கு இருபதினா யிரம் தினார்கள் கொடுக்க வேண் டும்'' என்று கூறி பலர் முன்னிலை யில்ஒரு பத்திரம் எழுதி கையெழுத் துப் போடச் சொன்னான்.

அல்நாஜர் பத்திரத்தில் கை எழுத்து போட்ட பின் இஸ்லாம் ''என் மகள் கட்டிலில் படுத்திருக் கிறாள். இறங்கக் கூட முடியாது அவள் படுக்கையறையிலேதான் உங்கள் கல்யாணம்'' எனக் கூறி அவனை அழைத்துச் சென்றான். திருமணமும் நடந்தது.

தனியே விடப்பட்ட அல்நாஜர் தன் மனைவியின் முகத்தை மறைத்த திரைச் சீலையை விலக்கி விட்டுப் பார்த்தாள். அவனுக்குத் தேள் கொட்டியது போலாயிற்று. ஏனெனில் அவன் தான் கடையில் பார்த்த பெண்ணே மணப்பெண் என எண்ணி இருந்தான். ஆனால் கட்டிலில் படுத்திருந்தவளோ நோஞ்சலாக விகாரமாக அம் மைத் தழும்புகளுடன் நீண்ட பற் களை உடையவளாக இருந்தாள்.

தன்னை ஏன் இப்படி ஏமாற்றி னார்கள் என யோசித்தவாறே அல் நாஜர் தன் வீட்டிற்குத் திரும்பி வந்தான். மறு நாள் இந்தப் பிரச் னைக்கு எப்படித் தீர்வு காண்பது என யோசித்தவாறே கடையில் உட்கார்ந்திருந்தான்.

அப்போது ஒரு குரல் ''மண மகனுக்கு என் வாழ்த்துக்கள். புது மணவாழ்வு எப்படி இருக் கிறது மாப்பிள்ளை அவர்களே'' என்று கேலியாகக் கேட்டது அவன் காதில் விழவே திடுக்கிட்டு தலை நிமிர்ந்து பார்த்தான். முன்பு கடைக்கு வந்து இஸ்லாமின் முக வரியைக் கொடுத்து விட்டுப் போன அழகி நின்று சிரித்துக் கொண்டிருந்தாள்.

அவளைப் பார்த்து அவன் திட்டி ''ஏன் இப்படி என் வாழ்வைக் குட்டிச்சுவராக்கி விட்டாய்?'' என்று கோபத்தோடு கேட்டான். அப்போது அவள் ''நான் எழுதி

அனுப்பிய காதல் கவிதையைக் கிழித்து என் மனதையே சுக்கு நூருக்கினுயே, நினைவிருக்கிறதா ?" என்று கேட்டாள்.

உடனே அல் நாஜர் அவள் கால்களில் விழுந்து ''நான் தெரியாத்தனமாக அப்படிச் செய்து விட்டேன் என்னை இந்தச் சிக்கலிலிருந்து விடுவி'' எனக் கெஞ்சினுன். அவளும் ஒரு வழியை சொல்லி விட்டுப் போனுள்.

அதன்படி மறு நாள் அல் நாஜர் தன்னேடு பல காட்டு மனிதர்களை யும் குறவர் கூட்டத்தையும் அழைத்துக் கொண்டு இஸ்லாமின் வீட்டிற்குப் போனுன். அவர்கள் சீட்டி அடித்து கொண்டும் தாரைதப்பட்டைகளை முழக்கிக் கொண்டும் இஸ்லாமின் வீட்டில் குதித்தார்கள்.

அது கண்டு இஸ்லாம் அல் நாஜரிடம் ''இதென்ன ஆர்ப்பாட்டம்?'' என்று கேட்கவே அவனும் ''இவர்களெல்லாம் என் உறவினர்கள். என் திருமணத்தை ஒட்டி விருந்து சாப்பிட வந்திருக்கிருர்கள்'' என்ருன். இஸ்லாமும் ''இவர்களா உன் உறவினர்கள்? நீ இவ்வளவு தாழ்ந்தவனு? இது தெரியாமல் உனக்கு பெண்ணைக் கொடுத்து விட்டேனே. நீ என் பெண்ணை விவாகரத்து செய்து விடு'' என்ருன் கோபத்தோடு.

அல் நாஜரும் ''அதெல்லாம் முடியாது. என் மனைவியை ஒரு நாளும் விட்டுப் போகமாட்டேன்" என்ருன். அப்போது இஸ்லாம் ''உனக்கு இருபதினுயிரம் தினுர்கள் நான் கொடுக்கிறேன். போய் விடு'' என்று அவன் காலில் விழுந்து கெஞ்சினுன். அல்நாஜரும் அரைமனதுடன் அதற்கு இணங்குவது போல நடித்து இஸ்லாமிடமிருந்து பணத்தை வாங்கிக் கொண்டு அவனது மகளை விவாகரத்து செய்து விட்டான்.

பிறகு அவன் தன் கடைக்கு வந்த அழகியையே மணந்தான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 25

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1981 பிப்ரவரி மாத இதழில் வெளியிடப்படும்**







I. Uma Rani

K. Sitharam

- தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.
- டிசம்பர் 10 தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.
- எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 25 பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே.
- தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி அம்புலிமாமா 'போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-26 என்ற முகவரிக்கு அனுப்பவும்.

---

## அக்டோபர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : வட்டமிட்டுப் பாய்ந்தோடும் ஒளியினைப் பாரீர்

இரண்டாவது போட்டோ : திட்டமிட்டுப் பாரதத்தை ஒளியேற்ற வீரர்

பரிசு பெற்றவர் : நாகை கே. கண்ணன், டால்மியா சிமிண்ட்ஸ், டால்மியாபுரம், திருச்சி மாவட்டம்

பரிசுத் தொகை ரூ. 25ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.

Printed by B. V. REDDI at Prasad Process Private Ltd., and Published by B. VISWANATHA REDDI for CHANDAMAMA CHILDREN'S TRUST FUND (Prop. of Chandamama Publications) 188, Arcot Road, Madras-600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

# கண்ணை மூடிக்கொள்
# ஆசையை நினைத்துக்கொள்

ஆசைகள் பூர்த்தியடைய முன்னேற்பாடு அவசியம். உன்னுடைய ஆசை என்ன? புதிய பொம்மையா, பொம்மை வீடா, சைக்கிளா? உன்னுடைய சொந்த பணத்திலேயே இவைகளையெல்லாம் வாங்க முடியும். எப்படி?

உனக்காகவே கனரா பாங்க் ஏற்படுத்தியுள்ள 'பாலக்ஷேமா' டெபாசிட் திட்டத்தில் இன்றே சேமிக்க ஆரம்பிப்பதால், அவ்வப்பொழுது கிடைக்கும் சில்லறைகளை அழகான **பாலக்ஷேமா** சேமிப்புப் பெட்டியில் போட்டு வை. பெட்டி நிறைய, நிறைய பணத்தை அருகில் உள்ள கனரா பாங்கில் உன் கணக்கில் போட்டுக் கொண்டேயிருக்கலாம். நீ ஆசைப்பட்டதை வாங்குகிற அளவிற்கு பணம் வளர்ந்து கொண்டேயிருக்கும் — காரணம், பாங்கு வட்டியும் சேருகிறது.

உன்னுடைய ஆசைகள் நிறைவேற எவ்வளவு சுலபமான வழி! சேமிக்கப் பழகுவதற்கு எவ்வளவு அற்புதமான முறை!

மற்ற விவரங்களுக்கு அருகாமையிலுள்ள கனரா பாங்கில் இன்றே தெரிந்துகொள்.

மற்ற டெபாசிட் திட்டங்கள் : **காமதேனு, நித்யநிதி, நிரந்தரா.**

## பாலக்ஷேமா டெபாசிட்




## கனரா பாங்க்




(தேசியமாக்கப்பட்ட பாங்க்)
நாடெங்கிலும் 1200க்கும் மேற்பட்ட கிளைகள் உள்ளன.

maa CB4 Tam 80

## என் பிறந்தநாளுக்கு புதிய புத்தகம்

## ஒரு யூகோபாங்க் பாஸ் புத்தகம்



எல்லாப் பரிசுகளையும் விட
மேலான பரிசு. அதுவே எனது
யூகோபாங்க் பாஸ் புத்தகம்.
அம்மா, உன் நல்லெண்ணத்
திற்கு எனது நன்றி! அதோடு,
என்னுடைய சேமிப்பை
பெருக்கும் யூகோபாங்க்கிற்கும்
எனது நன்றி.



**யுனைடெட் கமர்ஷியல் பாங்க்**

**உங்கள் அருகாமையில் உள்ள வசதியான பாங்க்**

UCO/CAS-69/80 TAM

# ராசுவும் வாசுவும்

**'மிட்டாய் வீரர்கள்'**






















சொக்கும் இன்பம்
சொட்டும் இனிமை
பலே ஜோர்

பார்லே

பாப்பின்ஸ் பழரச மிட்டாய்கள்—










5 பழரசச் சுவைவகைகள்—
ராஸ்ப்பெரி, அன்னாசி,
எலுமிச்சை, ஆரஞ்சு, சாத்துக்குடி.

everest/80/PP/309-tm